# CHILDREN'S TREASURE.

# பாலர் பொக்கிஷம்.

ஏழாம் பதிப்பு.

Tranquebar,
Printed at the Evang. Lutheran Mission Press,
1907.

# முதலாம் பங்கு.

*பொதுவான திருச்சபையிலே தொன்றுதொட்டு வழங்கி வருகிற மூலக்குறிப்பிடமும், ஞான திரவியங்களைக் கற்பிக்கும் மூலவாக்கியங்களுமாகிய கிறிஸ்துமார்க்கத்தின் ஆதி நியாயங்கள்.*

---

## கர்த்தர் அருளிச்செய்த பத்துக்கற்பனைகள்.

முதலாங் கற்பனையாவது, உன் தேவனாகிய கர்த்தர் நாமே. நமக்கு முன்பாக உனக்கு வேறே தேவனில்லாமல் போவதாக. உயர வானத்திலேயுங் கீழே பூமியிலேயும் பூமியின்கீழ்த் தண்ணீரிலேயும் உண்டான வஸ்துக்களுக்கு ஒத்திருக்கிற சுரூபத்தையானாலும், விக்கிரகத்தையென்கிலும், நீ உனக்கு உண்டாக்கவேண்டாம்; நீ அவைகளை நமஸ்கரிக்கவும் வணங்கவும்வேண்டாம்.

இரண்டாங் கற்பனையாவது, உன் தேவனாகிய கர்த்தருடைய நாமத்தை வீணிலே வழங்காதிருப்பாயாக.

மூன்றாங் கற்பனையாவது, திருநாளை ஆசரிக்க நினைப்பாயாக.

நாலாங் கற்பனையாவது, உனக்கு நன்மை வருகிறதற்கும், நீ பூமியிலே நீடித்திருக்கிறதற்கும், உன் தகப்பனையும் உன் தாயையுஞ் சங்கித்திருப்பாயாக.

ஐந்தாங் கற்பனையாவது, கொலை செய்யாதிருப்பாயாக.

ஆறாங் கற்பனையாவது, விபசாரம்பண்ணாதிருப்பாயாக.

ஏழாங் கற்பனையாவது, களவுசெய்யாதிருப்பாயாக.

எட்டாங் கற்பனையாவது, பிறத்தியானுக்கு விரோதமாகப் பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக.

ஒன்பதாங் கற்பனையாவது, பிறத்தியானுடைய வீட்டை இச்சியாதிருப்பாயாக.

பத்தாங் கற்பனையாவது, பிறத்தியானுடைய பெண்சாதியையாகிலும், அவனுடைய வேலைக்காரன் வேலைக்காரியையாகிலும், அவனுடைய ஆடு மாடு கழுதையையென்கிலும், மற்றும் அவனுக்குண்டான எதையாகிலும் இச்சியாதிருப்பாயாக.

இந்தப் பத்துக் கற்பனைகளுக்காகவுங் கர்த்தர் திருவுளம்பற்றினதாவது, உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நாம் எரிவந்தமுள்ள தேவனாயிருந்து, நம்மைப் பகைக்கிறவர்களுக்குள்ளே பிதாக்கள்செய்த அநியாயத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்று நாலு தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறோம். ஆனால் நம்மைச் சிநேகித்துக்கொண்டு, நம்முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கு ஆயிரந் தலைமுறைமட்டும் நன்மை செய்துகொண்டு வருகிறோமென்று திருவுளம்பற்றினார்.

---

## விசுவாசப்பிரமாணம்.

பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த சர்வத்திற்கும்வல்ல பிதாவாகிய பராபரனை விசுவாசிக்கிறேன்.

அவருடைய ஒன்றான குமாரனாகிய நம்முடைய நாதர் இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறேன்.

இவர் பரிசுத்த ஆவியினுல் கர்ப்பமாக உற்பவித்து; கன்னிமரியாளிடத்தினின்று பிறந்து, பொந்தியு பிலாத்து என்கிறவன் கீழ்ப் பாடுபட்டு, சிலுவையில் அறையுண்டு, மரித்தடக்கப்பட்டார். பாதாளங்களில் இறங்கி, மூன்ரும் நாள் மரித்தோரிடத்திலிருந்து உயிர்த்தெழுந்தருளினுர். பரமண்டலங்களுக்கேறி, சர்வத்திற்கும் வல்ல பிதாவாகிய பராபரனுடைய வலது பாரிசத்திலிருக்கிருர். அவ்விடத்திலிருந்து சீவனுள்ளோரையும் மரித்தோரையும் நடுத்தீர்க்க வருவார்.

பரிசுத்த ஆவியானவரை விசுவாசிக்கிறேன். பொதுவான பரிசுத்த சபையும், பரிசுத்தவான்களுடைய ஐக்கியமும், பாவமன்னிப்பும், மாமிச உயிர்த்தெழுதலும், நித்திய சீவனும் உண்டென்று விசுவாசிக்கிறேன்.

---

## கர்த்தருடைய செபம்.

பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் அர்ச்சிக்கப்படுவதாக. உம்முடைய இராச்சியம் வருவதாக. உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோல் பூமியிலேயுஞ் செய்யப்படுவதாக. அன்றன்றுள்ள எங்கள் அப்பத்தை எங்களுக்கு இன்று தாரும். எங்கள் கடன்காரருக்கு நாங்கள் மன்னித்து விடுகிறதுபோல், நீரும் எங்கள் (பாவக்) கடன்களை எங்களுக்கு மன்னித்துவிடும். எங்களைச் சோதனைக்குள் பிரவேசிக்கப்பண்ணுதிரும். ஆனுலோ தீமையிலிருந்து எங்களை இரட்சித்துக்கொள்ளும். அதேனென்ருல் இராச்சியமும் வல்லமையும் மகிமையும் உமக்கென்றென்றைக்கும் உண்டாயிருக்கிறது. ஆமேன்.

---

## ஞானஸ்நானக்கட்டளை.

இயேசு நாதர் தம்முடைய சீஷர்களைநோக்கி: நீங்கள் (உலகமெங்கும்) போய், சகல சாதிகளையுஞ் சீஷராக்கி, அவர்களுக்குப் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தினாலே ஞானஸ்நானங் கொடுங்கள் என்றும், விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான், விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவானென்றுந் திருவுளம் பற்றினார்.

---

## கர்த்தருடைய இராப்போசனக்கட்டளை.

நம்முடைய நாதர் இயேசுகிறிஸ்து தாம் காட்டிக் கொடுக்கப்பட்ட அன்றிராத்திரியில் அப்பத்தை எடுத்துக்கொண்டு, இஸ்தோத்திரம்பண்ணி, அதைப்பிட்டு, தம்முடைய சீஷர்களுக்குக் கொடுத்துத் திருவுளம்பற்றினதாவது: நீங்கள் இதை வாங்கித் தின்னுங்கள்; இது உங்களுக்காகக் கொடுக்கப்படுகிற என்னுடைய சரீரமாயிருக்கிறது. இதை என்னை நினைக்கிறதற்காகச் செய்யுங்களென்று திருவுளம்பற்றினார். பின்னையும் அந்தப்படியே, இராப்போசனம்பண்ணின பின்பு, அவர் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு, இஸ்தோத்திரம்பண்ணி, அவர்களுக்குக் கொடுத்துத் திருவுளம் பற்றினதாவது: இதிலே எல்லாருங் குடியுங்கள்; இந்தப் பாத்திரம் பாவமன்னிப்புக்கென்று உங்களுக்காகச் சிந்தப்படுகிற என்னுடைய இரத்தத்தில் புதிய ஏற்பாடாயிருக்கிறது. இதை நீங்கள் குடிக்கும்போதெல்லாம் என்னை நினைக்கிறதற்காகச் செய்யுங்கள் என்று திருவுளம்பற்றினார்.

# இரண்டாம் பங்கு.

## வேத வாக்கியங்கள்.

---

1. பராபரன் தம்முடைய ஒரே பேறான குமாரனை, அவர் பேரில் விசுவாசிக்கிறவன் எல்லாம் கெட்டுப்போகாமல், நித்திய சீவனை அடைவதற்காக, தந்த அத்தன்மையாய் லோகத்தைச் சிநேகித்தார். யோவா. 3, 16.

2. ஒரே பராபரனும், பராபரனுக்கும் மனுஷருக்கும் ஒரே மத்தியஸ்தரும் உண்டு; இவர் எல்லாருக்காகவுந் தம்மை மீட்கும் பொருளாக ஒப்புக்கொடுத்த மனுஷனான கிறிஸ்து இயேசு தானே. 1 தீமோ. 2, 5.

3. ஆதியிலே வார்த்தை இருந்தது; அவ்வார்த்தைப் பராபரனிடத்தில் இருந்தது; அவ்வார்த்தைப் பராபரனுமாயிருந்தது. இது ஆதியிலே பராபரனிடத்தில் இருந்தது. எல்லாம் அதனால் உண்டாயிற்று. உண்டானது ஒன்றும் அதை அல்லாமல் உண்டானதில்லை. யோவான் 1, 1-3.

4. அந்த வார்த்தை மாமிசமாகி, கிருபையினாலும் உண்மையினாலும் நிறைந்ததாய் நம்மிடத்தில் வாசம் பண்ணிற்று; பிதாவுக்கு ஒரேபேறானவரின் மகிமையாக அவருடைய மகிமையைக் கண்டோம். யோவா. 1, 14.

5. பராபரன் மாமிசத்திலே வெளிப்பட்டார், ஆவியிலே நீதி விளங்கப்பட்டார், தூதருக்குத் தரிசனையானார், சாதிகளிடத்தில் பிரசங்கிக்கப்பட்டார். லோகத்தில் விசுவாசிக்கப்பட்டார், மகிமையிலே எறெடுத்துக் கொள்ளப்பட்டார் என்கிற தெய்வபத்தியின் இரகசியம் விளங்கும் பிரகாரமாகப் பெரிதாயிருக்கிறது. 1 தீமோ. 3, 16.

6. நமக்கு ஒரு பாலகன் பிறந்தார்; நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டார்; கர்த்தத்துவம் அவர் தோளின்மேல் இருக்கும்; அவர் நாமம் அதிசயமானவர், ஆலோசனைக்காரர், வல்லமையுள்ள பராபரன், நித்திய பிதா, சமாதானப் பிரபு என்னப்படும். எசா. 9, 6.

7. பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து இயேசு லோகத்திலே வந்தார் என்கிறது உண்மையும் எல்லா அங்கிகரிப்புக்குப் பாத்திரமுமான வார்த்தை. 1 தீமோ. 1, 15.

8. அவராலே நீங்கள் கிறிஸ்து இயேசுவுக்குள் இருக்கிறீர்கள்; இவர் பராபரனாலே நமக்கு ஞானமும் நீதியும் பரிசுத்தப்படுத்தலும் மீட்பும் ஆக்கப்பட்டார். 1 கொரி. 1, 30.

9. அவர் நம்முடைய பாவங்களின் நிமித்தம் ஒப்புக்கொடுக்கப்பட்டு, நாம் நீதிமான்கள் ஆக்கப்படுவதற்காக எழுப்பப்பட்டார். ரோமர் 4, 25.

10. மறுநாளிலே யோவான் இயேசுவைத் தன்னண்டை வரக் கண்டு, சொன்னதாவது: இதோ, லோகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற பராபரனுடைய ஆட்டுக்குட்டி. யோவா. 1, 29.

11. நாம் அவருக்குள் பராபரனுடைய நீதியாகும்படிக்கு பாவம் அறியாத அவரை நமக்காகப் பாவம் ஆக்கினார். 2 கொரி. 5, 21.

12. மோசே வனாந்தரத்தில் சர்ப்பத்தை உயர்த்தின வண்ணமாய் மனுஷனுடைய குமாரனும், அவர் பேரில் விசுவாசிக்கிறவன் எல்லாங் கெட்டுப்போகாமல், நித்திய ஜீவனை அடைவதற்காக உயர்த்தப்படவேண்டியது. யோவான் 3, 14. 15.

13. விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் நீதி உண்டாகக் கிறிஸ்து நியாயப்பிரமாணத்தின் நிறைவேற்றுதலாயிருக்கிறார். ரோமர் 10, 4.

14. குமாரன் பேரில் விசுவாசிக்கிறவனுக்கு நித்திய ஜீவன் உண்டு; குமாரனை விசுவாசியாதவனோ ஜீவனைக் காண்பதில்லை, பராபரனுடைய கோபம் அவன் மேல் நிலைநிற்கும். யோ. 3, 36.

15. குமாரனைக் கண்டு, அவர் பேரில் விசுவாசிக்கிறவன் எல்லாம் நித்திய ஜீவனை அடைவதே என்னை அனுப்பினவருடைய சித்தமாய் இருக்கிறது; அவனை நான் கடைசிநாளில் எழுப்புவேன் என்றார். யோவா. 6, 40.

16. மனுஷன் நியாயப்பிரமாணத்தின் கிரியைகளை அல்லாமல், விசுவாசத்தினாலே நீதிமானாக்கப்படுகிறான் என்று தீர்க்கிறோம். ரோம. 3, 28.

17. கிருபையினாலே விசுவாசத்தைக் கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள்; இது உங்களால் உண்டானதும் அல்ல, இது பராபரனுடைய ஈவு, யாதொருவன் பெருமை பாராட்டாதபடிக்கு இது கிரியைகளால் உண்டானதல்ல. எபேசி. 2, 8. 9.

18. விசுவாசமோவென்றால் நம்புகிற காரியங்களின் திட அஸ்திபாரமும், காணுத காரியங்களின் நிச்சயத்தைத் தெரிவிக்குதலுமாய் இருக்கிறது. எபி. 11, 1.

19. சீமோன் பேதுரு அவருக்குப் பிரத்தியுத்தாரமாக: ஆண்டவரே, ஆர் அண்டைக்குப் போவோம்; உம்மில் நித்திய சீவனுடைய வசனங்கள் உண்டாயிருக்கிறது. நீர் சீவனுள்ள பராபரனுடைய குமாரனுகிய கிறிஸ்து என்கிறதை நாங்கள் விசுவாசித்தும் அறிந்தும் இருக்கிறோம் என்றான். யோவா. 6, 68. 69.

20. அவர்கள் ஒன்றான மெய்த்தெய்வமாகிய உம்மையும், நீர் அனுப்பின இயேசு கிறிஸ்துவையும் அறிவதே நித்திய சீவனுயிருக்கிறது. யோவா. 17, 3.

21. இப்போதும் எவனுகிலும் மனுஷர் முன்பாக என்னை அறிக்கை பண்ணினுல், அவனை நானும் பரமண்டலங்களில் இருக்கிற என் பிதா முன்பாக அறிக்கைபண்ணுவேன். ஆனுல், எவனுகிலும் மனுஷர் முன்பாக என்னை மறுதலித்தால், அவனை நானும் பரமண்டலங்களில் இருக்கிற என் பிதா முன்பாக மறுதலிப்பேன் என்றார். மத். 10, 32. 33.

22. கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்துக்காக நான் வெட்கப்படேன்; ஏனெனில் அது விசுவாசிக்கிற எவனையும், முந்தி யூதனையுங் கிரேக்கனையும் கூட இரட்சிப்பதற்காகத் தெய்வ பெலனுய் இருக்கிறது. ரோமர் 1, 16.

23. இப்போதும் நாம் விசுவாசத்தினுல் நீதிமான்கள் ஆக்கப்பட்டபடியினுலே, நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மூலமாய்ப் பராபரனிடத்திலே சமாதானம் பெற்றிருக்கிறோம். ரோமர் 5, 1.

24. இழந்துபோனதைத் தேடவும் இரட்சிக்கவும் மனுஷனுடைய குமாரன் வந்தார் என்றார். லூக். 19, 10.

25. நியாயப்பிரமாணம் மோசேயைக் கொண்டு கொடுக்கப்பட்டது; கிருபையும் உண்மையும் இயேசு கிறிஸ்து மூலமாய் உண்டாயிற்று. யோவா. 1, 17.

26. பூமியின் எல்லா எல்லைகளே, நம்மை நேரிட்டு நோக்குங்கள், அப்போது இரட்சிக்கப் படுவீர்கள்: ஏனென்றுல் நாமே பராபரன், வேறொருவரும் இல்லை. எசா. 45, 22.

27. பராபரன் நமக்கு அனுசாரியாயிருந்தால், நமக்கு விரோதமாய் இருப்பவன் ஆர். அவர் தம்முடைய சொந்தக்

குமாரனையும் பாராமல், அவரை நம்மெல்லாருக்காகவும் ஒப்புக்கொடுத்தாரே; அவர் இவரோடேகூட யாவையும் நமக்கு அருளாதிருப்பது எப்படி. ரோமர் 8, 31. 32.

28. நமக்குப் பாவம் இல்லை என்றோமானால், உண்மை நமக்குள் இராமல் நம்மை நாமே மோசம் போக்குகிறோம். நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், அவர் நமக்குப் பாவங்களை மன்னித்து, நம்மை எல்லா அநியாயமும் நீங்கச் சுத்திகரிப்பதற்கு, உண்மையும் நீதியும் உள்ளவராய் இருக்கிறார். 1 யோவான் 1, 8. 9.

29. மாமிசத்தினால் பிறந்தது மாமிசமாயிருக்கிறது, ஆவியினால் பிறந்தது ஆவியாயிருக்கிறது. யோவா. 3, 6.

30. மனுஷனுடைய இருதயத்தின் தோற்றுதல் அவன் சிறுவயதுதுவக்கிப் பொல்லாததாயிருக்கிறது. 1 மோ. 8, 21.

31. அதேனென்றால் இருதயத்திலிருந்து பொல்லாத சிந்தனைகளும் கொலைகளும் விபசாரங்களும் வேசித்தனங்களும் களவுகளும் பொய்ச்சாட்சிகளும் தூஷணங்களும் புறப்பட்டு வரும். இவைகள் மனுஷனைத் தீட்டுப்படுத்துகிறவைகள். மத். 15, 19. 20.

32. நீதிமான் ஒருவனாகிலும் இல்லை; உணர்வுள்ளவன் இல்லை, பராபரனைத் தேடுகிறவன் இல்லை. எல்லாரும் வழிதப்பிப்போய், ஏகமாய்க் கெட்டுப்போனார்கள். நன்மை செய்கிறவன் ஒருவனாகிலும் இல்லை. ரோ. 3, 10-12.

33. பாவத்தைச் செய்கிறவன் பிசாசினால் உண்டாயிருக்கிறான்; ஏனெனில் ஆதி முதலாய்ப் பிசாசு பாவஞ் செய்கிறது. பிசாசின் கிரியைகளைக் குலைக்கவே பராபரனுடைய குமாரன் வெளிப்பட்டார். 1 யோவா. 3, 8.

34. பாவத்தின் சம்பளம் மரணம்; பராபரனுடைய கிருபை வரமோவெனில் நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசு மூலமாய் வரும் நித்திய சீவன். ரோ. 6, 23.

35. மனத்தரித்திரர் பாக்கியவான்கள், அதேனென்றால் வானராச்சியம் அவர்களுடையதாயிருக்கிறது. மத். 5, 3.

36. துயரப்படுகிறவர்கள் பாக்கியவான்கள், அதேனென்றால் அவர்கள் தேற்றப்படுவார்கள். மத். 5, 4.

37. மெத்தனவுள்ளவர்கள் பாக்கியவான்கள், அதேனென்றால் அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக் கொள்ளுவார்கள். மத். 5, 5.

38. நீதியின் பேரிலே பசிதாகமுள்ளவர்கள் பாக்கியவான்கள், அதேனென்றால் அவர்கள் திருப்தி அடைவார்கள். மத். 5, 6.

39. இரக்கமுள்ளவர்கள் பாக்கியவான்கள், அதேனென்றால் அவர்கள் இரக்கம் பெறுவார்கள். மத். 5, 7.

40. இருதயத்தில் சுத்தமானவர்கள் பாக்கியவான்கள், அதேனென்றால் அவர்கள் பராபரனைத் தரிசிப்பார்கள். மத். 5, 8.

41. சமாதானத்தை நடத்துகிறவர்கள் பாக்கியவான்கள், அதேனென்றால் அவர்கள் பராபரனுடைய புத்திரர் என்னப்படுவார்கள். மத். 5, 9.

42. நீதியின் நிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பாக்கியவான்கள், அதேனென்றால் வானராச்சியம் அவர்களுடையதாய் இருக்கிறது. மத். 5, 10.

43. ஒருவன் தண்ணீரினாலும் ஆவியினாலும் பிறந்தாலே ஒழிய, பராபரனுடைய இராச்சியத்துக்குள் பிரவேசிக்கக் கூடாது. யோவா. 3, 5.

44. பிரயாசப்பட்டுப் பாரஞ் சுமந்தவர்களாகிய நீங்கள் எல்லாரும் என்னண்டைக்கு வாருங்கள்; நான் உங்களை முசிப்பாற்றுவேன்; என் நுகத்தடியை உங்கள்மேல் ஏற்றுக்கொண்டு, என்னிடத்திலே கற்றுக்கொள்ளுங்கள். அதேனென்றால் மெத்தனவும் மனத்தாழ்மையுமாய் இருக்கிறேன். அப்படியே உங்கள் ஆத்துமங்களுக்கு முசிப்பாறுதல் கிடைக்கும். ஏனெனில் என் நுகத்தடி மெதுவும் என் சுமை லேசுமாய் இருக்கிறது என்றார். மத். 11, 28-30.

45. ஒருவன் கிறிஸ்துவுக்குள் இருந்தால், புதுச் சிருஷ்டியாயிருக்கிறான். பழையவைகள் ஒழிந்து போயிற்று; இதோ, எல்லாம் புதிதாயிற்று. 2 கொரி. 5, 17.

46. ஒருவருக்கொருவர் பொய் சொல்லாதேயுங்கள்; பழைய மனுஷனை அதன் செய்கைகளோடுங் கூடக் கழற்றிப் போட்டு, தன்னைச் சிருஷ்டித்தவரின் சாயலாக அறிவுண்டாகும் படிக்குப் புதிதாக்கப்பட்ட புது மனுஷனைத் தரித்துக் கொள்ளுங்கள். கொலொ. 3, 9. 10.

47. முற்காலத்தில் அந்தகாரமாயிருந்தீர்கள்; இப்போதோவெனில் கர்த்தருக்குள் வெளிச்சமாயிருக்கிறீர்கள். வெளிச்சத்தின் பிள்ளைகளாய் நடந்துகொள்ளுங்கள். எபே. 5, 8

48. ஆவியின் கனியோவென்றால்: சிநேகம், சந்தோஷம், சமாதானம், நீண்டசாந்தம், தயவு, நற்குணம், விசுவாசம் மெத்தனவு, இச்சையடக்கம், இப்படிக்கொத்தவர்களை நியாயப்பிரமாணம் விரோதிக்காது. கலா. 5, 22. 23.

49. நாம் பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்வதே அவரைச் சிநேகிக்கிற சிநேகம். அவர் கற்பனைகள் பாரமும் அல்ல. ஏனென்றால் பராபரனில் பிறந்தது எல்லாம் லோகத்தைச் செயிக்கும்; நம்முடைய விசுவாசமே லோகத்தைச் செயித்த செயம். 1 யோவா. 5, 3. 4.

50. தெய்வபத்தியோவென்றால் எல்லாவற்றிற்கும் பிரயோசனமாயிருந்து, இச்சீவனுக்கும் வருஞ்சீவனுக்கும் வாக்குத்தத்தம் பெற்றிருக்கிறது. 1 தீமோ. 4. 8.

51. பாரபரனுடைய வார்த்தையைக் கேட்டு, அதைக் காத்துக்கொள்ளுகிறவர்களே பாக்கியவான்கள். லூக். 11, 28.

52. கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்துக்குத் துவக்கம், அவைகளின்படி செய்கிற யாவருக்கும் நற்புத்தியுண்டு. அப்படிக்கொத்தவன் புகழ்ச்சி என்றைக்கும் நிற்கும். சங். 111, 10.

53. கற்பனையினுடைய இலக்கோவெனில் சுத்த இருதயத்திலும் நல்மனச்சாட்சியிலும் மாயமற்ற விசுவாசத்திலும் பிறக்குஞ் சிநேகந்தான். 1 தீமோ. 1, 5.

54. உன் பராபரனாகிய கர்த்தரை உன் முழு இருதயத்தாலும் உன் முழு ஆத்துமத்தாலும் உன் முழு வினுவினாலும் சிநேகிப்பாயாக, இது முதலாம் பெரிய கற்பனையாயிருக்கிறது. அத்தோடொத்த இரண்டாங் கற்பனையோ, உனக்கு அடுத்தவனை உன்னைப்போல் சிநேகிப் பாயாக என்பது. இவ்விரண்டு கற்பனைகளில் எல்லா நியாயப்பிரமாணமுந் தீர்க்கதரிசனங்களும் தொங்குகிறது என்று இயேசு சொன்னார். மத். 22, 37-40.

55. மனுஷர் உங்கள் நற்கிரியைகளைக் கண்டு, பரமண்டலங்களில் இருக்கிற உங்கள் பிதாவை மகிமைப்படுத்துகிறதற்காக உங்கள் வெளிச்சம் அவர்கள் முன்பாகப் பிரகாசிக்கக் கடவது. மத். 5, 16.

56. நீங்கள் உங்களை அந்தகாரத்தை விட்டுத் தம்முடைய ஆச்சரியமான வெளிச்சத்துக்கு வரவழைத்தவருடைய

புண்ணியங்களை அறிவிக்கும்படிக்குத் தெரிந்துகொள்ளப்பட்ட சந்ததியும், இராசரீகமான ஆசாரியக் கூட்டமும், பரிசுத்த சாதியும், அவருக்குச் சொந்தமான சனமுமாய் இருக்கிறீர்கள். 1 பேது. 2, 9.

57. தம்மை நோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும் உண்மையாய்த் தம்மை நோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும் கர்த்தர் சமீபமாயிருக்கிறார். அவர்தமக்குப் பயந்தவர்களுடைய விருப்பத்தின்படி செய்து, அவர்கள் கூப்பிடுதலைக் கேட்டு அவர்களை இரட்சிக்கிறார். சங். 145, 18. 19.

58. நெருக்கப்படுகிற நாளிலே நம்மை நோக்கிக் கூப்பிடு, அப்போது உன்னை விடுவிப்போம், அதுக்காக நீ நம்மை மகிமைப்படுத்தக் கடவாய். சங். 50, 15.

59. கேளுங்கள், அப்போது உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்போது கண்டு பிடிப்பீர்கள்; தட்டுங்கள், அப்போது உங்களுக்குத் திறக்கப்படும். ஏனென்றால் கேட்கிறவன் எல்லாம் வாங்குகிறான். தேடுகிறவன் கண்டு பிடிக்கிறான். தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும். மத். 7, 7. 8.

60. மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன், நீங்கள் என் நாமத்திலே பிதாவைக் கேட்கப்போகிற யாவையும் உங்களுக்குக் கொடுப்பார். யோவா. 16, 23.

61. நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படாமல், எல்லாவற்றிலும் உங்கள் விண்ணப்பங்கள் இஸ்தோத்தரிப்புடனே கூடிய செபத்தினாலும் வேண்டுதலினாலும் பராபரனுக்கு அறிவிக்கப்படக்கடவது. பிலி. 4, 6.

62. நம்பிக்கையிலே சந்தோஷமாயிருங்கள்; உபத்திரவத்திலே பொறுமையாயிருங்கள்; செபத்திலே உறுதியாய்த் தரித்திருங்கள். ரோ. 12, 12.

63. வேளை வரும், அப்போது பிரேதக் குழிகளிலுள்ள அனைவரும் அவருடைய சத்தத்தைக் கேட்டு, நன்மை செய்தவர்கள் சீவனுக்கு எழுந்திருக்கிறவர்களாகவும், தீமை செய்தவர்களோ ஆக்கினைக்கு எழுந்திருக்கிறவர்களாகவும், புறப்படுவார்கள். யோவா. 5, 28. 29.

64. வசனத்தின் கடைத்தொகையை எல்லாம் கேட்போமாக: பராபரனுக்குப் பயந்து, அவர் கற்பனைகளைக் கைக்கொள்; ஏனெனில் இதுவே எல்லா மனுஷர் மேலும் விழுந்த

கடன். அதேனென்றால் சகல கிரியையையும் அந்தரங்கமான செல்லாவற்றையுங் கூட. அது நன்மையானாலுந் தீமையானாலும் பராபரன் நியாயத்திலே கொண்டுவருவார். பிரசங். 12, 13. 14.

65. நல்ல போராட்டத்தைப் போராடினேன். ஓட்டத்தை முடித்தேன், விசுவாசத்தைக் கைக்கொண்டேன். அப்புறம் நீதியுள்ள நியாயாதிபதியாகிய கர்த்தர் அந்நாளில் எனக்குக் கொடுக்கப்போகிற நீதியினுடைய கிரீடம் எனக்கு வைத்திருக்கிறது. ஆனால் எனக்கு மாத்திரம் அல்ல, அவர் பிரசன்னமாகுதலை விரும்பின அனைவருக்குந்தானே. 2 தீமோ. 4, 7. 8.

66. ஆனால் கர்த்தர் என்னை எல்லாத் துஷ்கருமத்துக்கும் விலக்கி விடுவித்து, தம்முடைய பரம இராச்சியத்துக்குள்படக் காப்பாற்றுவார். அவருக்கு என்றென்றைக்குமுள்ள சதா காலங்களிலும் மகிமையுண்டாவதாக, ஆமேன். 2 தீமோ. 4, 18.

# மூன்றாம் பங்கு.

## ஞானப்பாட்டுகள்.

---

### 1. Gott sei Dank in aller Welt. (3.)

கர்த்தருக்கிஸ்தோத்திரம்; — மீட்போம் என்ற வாசகம் — பிசகாமல், சுவாமியார் — மீட்பரை அனுப்பினார்.

2. முற்பிதாக்கள் யாவரும் — தீர்க்கதரிசிகளும் — சொல்லி ஆசைப்பட்டது — வந்து நிறைவேறிற்று.

3. ஆபிரகாமுடை பலன் — இஸ்ரவேலின் சூரியன் — என்ற கன்னிமைந்தனே — வந்தார் சீயோன், உனக்கே.

4. வாழ, என் வெளிச்சமே, — ஓசியன்னா, சீவனே, — என் இருதயத்திலும் — தயவாய்ப் பிரவேசியும்.

5. உள்ளே சேரும் ராயரே, — அது உம்முடையதே; — பாவழுக்கனைத்தையும் — அதில் நீரே நீக்கவும்.

6. நீர் சாதுள்ள தயவாய் — வந்தீர்; அந்த வண்ணமாய் — இப்போதென்மேல் மெத்தவும் நீண்ட சாந்தமாயிரும்.

7. சாத்தான் வெகு சர்ப்பனை — பண்ணியும் என் மனதை — நீர் எல்லாப் பயத்திலும் — ஆற்றித் தேற்றிக்கொண்டிரும்.

8. நான் பலத்து உம்முடை — மீட்பினால் செம்பீரிக்க — சர்ப்பத்தின் தலையை நீர் — வென்றுடைக்கக் கடவீர்.

9. நீர் திரும்ப வருகில், — சீவாதிபதி, என்னில் — உமதந்தஞ் சாயலும் — காணக் கட்டளையிடும்.

### 2. Lobt Gott, ihr Christen allzugleich. (17.)

சபையே, இன்று வானத்தை — திறந்து, தமது — சுதனை ஈயும் சுவாமியை — துதித்துக்கொண்டிரு.

2. பிதாவோடொத்த இவரே — குழந்தையாகிறார்; — திக்கற்று முன்னணையிலே — கிடக்கவும் வெட்கார்.

3. சிறியோராக ஆண்டவர் — பலத்தை மாற்றினார்; — பண்செய்வன் ரூபைச் சிஷ்டிகர் — தாமே எடுக்கிறார்.

4. தூதர்களின் அதிபதி — முலைப்பால் உண்கிறார். — எளிய கன்னியாஸ்திரி — கர்த்தாவுட தாயார்.

5. புவியில் அவர் பரம — இராச்சியத்தையே — உண்டாக்க வந்தோராகிய — தாவீதின் மைந்தனே.

6. தெய்வீக சுபாவம் நம்மிலே — உண்டாக சுவாமியார் — நரரின் சுபாவமாய் இங்கே — பிறந்திருக்கிறார்.

7. தாழ்ந்தோர் அவர், உயர்ந்தோன் நான், - இதென்ன மாறுதல்; - இதுன்னத சிநேகந்தான், - இதன்பின் ஆழங்கள்.

8. திரும்பப் பரதீசுக்கு — வழி திறந்துபோம்; — கேருபீன் காவல் வாங்கிற்று; — மகிழ்ந்து பாடுவோம்.

## 3. Vom Himmel hoch. (20.)

தேவதூதன் சொல்லுகிறது.

பரத்திலே இருந்துதான் — அனுப்பப்பட்ட தூதன் நான் — நற்செய்தி அறிவிக்கிறேன், — பயப்படாதிருங்களேன்.

2. இதோ எல்லாச் சனத்துக்கும் — பெரிய நன்மையாய் வரும் — சந்தோஷத்தைக் களிப்புடன் — நான் கூறுஞ் சுவிசேஷகன்.

3. இன்றுங்கள் கர்த்தரானவர், — மேசியா உங்கள் ரட்சகர்; — தாவீதின் ஊரில் திக்கில்லார் — ரட்சிப்புக்காகச் சென்மித்தார்.

4. பரத்திலே நாம் ஏகமாய் - இனி இருக்கத் தக்கதாய் - இக்கட்டும் பாவமுமெல்லாம் — இம்மீட்பரால் நிவிர்த்தியாம்.

5. குறிப்பைச் சொல்வேன்: ஏழையாய் — துணியில் சுற்றப்பட்டதாய் — இப்பிள்ளை முன்னணையிலே — படுக்கும்; ஆர், கர்த்தர் தாமே.

விசுவாசிகள் சொல்லுகிறது.

6, களிப்பாய் நாமும் மேய்ப்பரின் — பிறகாலே சென்று சுவாமியின் — ஈவானதை நாம் கேட்ட சொல் — படியே பார்ப்போம், வாருங்கள்.

7. ஆர் அங்கே முன்னணையிலே — கிடக்கிறார், என் மனதே, — இப்பிள்ளையை நீ உற்றுப்பார். — இதே உன் இயேசு சுவாமியார்.

8. என் சுவாமி வாழ, பாவியை — நீர் கைவிடாமல், இத்தனை — தாழ்வாய் என்னண்டை வந்தது — அளவில்லாத தயவு.

9. எல்லாஞ் சிஷ்டித்த தேவரீர் — இம்மட்டுக்கும் இறங்கினீர்; — இங்கே இப்புல்லின்மேல், ஐயோ — நீர், சுவாமி, வைக்கப் பட்டீரோ.

10. பூலோகம் வெகுவத்தனை — விஸ்தாரம் நேர்த்தி மகிமை — ஆனாலும் உம்மைக் கொள்ளுமோ, — அதுமக்கொரு தொட்டிலோ.

11. மகா இராசா, உமது — பொற்சரிகை சிங்காரிப்பு — விலூதிபட்டும் ஏதெனில் — துணியின் துண்டு, காய்ந்தபுல்.

12. பூலோகத்துக்குப் பிரஸ்தாபமும் — மினுக்கு செல்வம் ஆஸ்தியும் — அனைத்தும் மாய்கை என்று நீர் — இத்தால் நன்றாகக் காண்பித்தீர்.

13. ஆ, இன்பமான இயேசுவே, — மெய் ஆஸ்தியான உம்மையே — நான் பெற்றிருக்க என்றைக்கும் — என் நெஞ்சில் வாசமாயிரும்.

14. அத்தால் நான் நித்தம் பூரிப்பாய் — இருந்து, மா சந்தோஷமாய் — இம்மாய்கையை வெறுக்கிறேன், — கதியாம் உம்மைப் பாடுவேன்.

15. பிரிய ஏக மைந்தனை — பாராமல் தந்த சுவாமியை — இஸ்தோத்திரிப்போம், பூமிக்கு — ரட்சிப்பின் நாள் உதித்தது.

## 4. Nun lasst uns gehn und treten. (26.)

இம்மட்டும் சிவன் தந்த — கர்த்தாவை அத்தியந்த — பணிவாய் உண்மையாக — இஸ்தோத்திரிப்போமாக.

2. நாள் பேச்சைப்போல் கழியும் — தண்ணீரைப் போல் வடியும்; — ஆனால் இந்நாள் வரைக்கும் — இவ்வேழை மண் பிழைக்கும்.

3. அநேக விதமான — இக்கட்டையும் உண்டான — திகிலையும் கடந்தோம், — கர்த்தாவின் மீட்டைக் கண்டோம்.

4. புசலை வரக் கண்ட — தாய் தன்னுட உகந்த — குழந்தையை நன்றாக — தற்காக்கும் வண்ணமாக.

5. கர்த்தாவின் கை துன்னுளில் — இரட்சகரின் காலில் — விழுந்தண்ணார்ந்து பார்க்கும் — சன்மார்க்கரைத் தற்காக்கும்.

6. ஆம், எங்கள் எச்சரிப்பும் — விசாரிப்பும் விழிப்பும், — தயாபரா, நீர் தாமே — காக்காவிட்டால் வீணுமே.

7. தினமும் நவமான — அன்பாய் நீர் செய்ததான — அனுக்கிரகத்துக்காக — துதி உண்டாவதாக.

8. இனியும் நீர் நேரிட்டு — அடியாரை ரட்சித்து, எல்லா இக்கட்டிலேயும் அன்பாய்ச் சகாயஞ் செய்யும்.

9. துன்னுளில் நாங்கள் தாழ்ந்து — மிரண்டும் உம்மைச் சார்ந்து — நிலைக்கிறதுக்காக — திடன் அளிப்பீராக.

10. மா சனச் சேதத்துக்கு — உண்டான போர்களுக்கு- ஓர் முடிவு, வரட்டும், — நொறுங்கினதைக் கட்டும்.

11. சபையை ஆதரித்து, — அன்பாய் ஆசீர்வதித்து, — எல்லாரின் மேல் அன்றன்றும் — அருள் உதிக்கப் பண்ணும்.

12. பொல்லாரைத் தயவாக — திருப்பிக்கொள்வீராக,- இருளிலே திரியும் — சனத்துக்கொளிவீயும்.

13. திக்கற்றவரைக் காரும், — நோயாளிகளைப் பாரும்,- துக்கித்தவரைத் தேற்றும், — சாவாரைக் கரையேற்றும்.

14. பரத்துக்கு நேராக — நடக்கிறதுக்காக — அடியாரை எந்நாளும் — தேவாவியாலே ஆளும்.

15. அடியார் அத்தியந்த — பணிவாய்க் கேட்டுவந்த — வரங்களை அன்பாக — தந்தருளுவீராக.

## 5. Ach Jesu, dessen Treu. (28.)

10. **நா**ன் இயேசு நாமத்தில் — தினம் எழுந்திருந்து,- நான் இயேசு நாமத்தில் — என் வேலைக்குட் புகுந்து, — நான் இயேசு நாமத்தில் — எப்போதும் யாவையும் — துவக்கிக்கொள்ளவும் — முடித்துப் போடவும்.

11. நான் தேவரீருக்கு — இவ்வுலகில் பிழைப்பேன்,- நான் தேவரீரையே — மரிக்கும்போதணைப்பேன், — உம்மாலே மோட்சத்தில் — நான் உட்பிரவேசிப்பேன், — அங்கும்மை என்றைக்கும் — துதித்துப் போற்றுவேன்.

## 6. Jesu, rufe mich. (35.)

என்னை, இயேசுவே, — உம்மிடத்திலே — வரச்சொல்லும் சேர்த்துக்கொள்ளும், — சுவாமி இயேசுவே.

2. தாழ்வில் செனமித்தீர், — பெத்லகேமில் நீர் — ஏழைக்காக ஏழையாக — வந்து சென்மித்தீர்.

3. நல்ல தானமே, — பெத்லகேம் ஊரே, — நீ அனந்த வாழ்வைத் தந்த — நல்ல தானமே.

4. நீ சிறியது, ஆனால் பூமிக்கு — சோதி காண மூலமான — நீ பெரியது.

5. தெய்வ வசனம் — என் நட்சத்திரம், — கிறிஸ்தைக் காட்டித் தாற வாத்தி — தெய்வ வசனம்.

6. உமக்கேங்கிறேன், — காட்சி தாருமேன், — ஆவலோடும் பத்தியோடும் — உமக்கேங்கிறேன்.

7. உம்மைக் காண்பியும், — மறையாதிரும், — தெளிவாக அன்புமாக — உம்மைக் காண்பியும்.

8. தேவ பிள்ளையே, — வல்ல மீட்பரே, — உம்மை நாடும் நெஞ்சு வாழும், — தேவபிள்ளையே.

9. இன்ப நேசரே, — தேவரீரையே — என்றும் பாடும் பேறைத் தாரும், — இன்பநேசரே.

## 7. O Haupt voll Blut und Wunden. (42.)

இரத்தங் காயங் குத்தும் — நிறைந்து, நிந்தைக்கே — முள் கிரீடத்தாலே சுற்றும் — சூடுண்ட சிரசே, — முன் கன மேன்மைகொண்ட — நீ லச்சை காண்பானேன்; — ஐயோ, வதைந்து நொந்த — உன் முன் பணிகிறேன்.

2. பூலோகமும் பணியும் — முகத்தின் மேனியே, — ஏன் உன்னைத் தான் உமியும் — தீழ்ப்பாச்சுதந்தமே. — ஐயோ, நீ வெறுபட்டாய் — பரவெளிச்சமாம் — கண் சோதி மா இக்கட்டாய் — இருண்டு மங்கலாம்.

3. அன்புள்ள கன்ன ரூபும் — உதட்டு வர்ணமும் — வெட்டுண்ட புல்லும் பூவும் — படும்போல் உலரும் — மா கர்த்தரே, நீர் தானே — மடிய வேணுமோ, — அழிக்கப்பட நானே — நேரஸ்தன் அல்லவோ.

4. நீர் பட்ட வாதையாவும் — என் பாவப் பாரமே. — இத்தீங்கும் நோவுஞ் சாவும் — என் குற்றம் கர்த்தரே. — இதோ, நான் என்றுஞ் சாக — நிதானமென்கிறேன்; — ஆனால் என் மேல் அன்பாக — கண் பார்வை ஆகுமேன்.

5. நீர் என்னை உமதாடாய் — அறியும் மேய்ப்பரே, — முன் சீவன் ஊறும் ஆறாய் — என் தாகந் தீர்த்தீரே. — நீர் என்னைப் போதிவிக்க — அமிர்தம் உண்டேனே, — நீர் தேற்றரவளிக்க — பேரின்பமாச்சுதே.

6. உம்மண்டை இங்கே நிற்பேன், — என்மேல் இரங்குமேன். — விண்ணப்பத்தில் தரிப்பேன், — என் கர்த்தரை விடேன். — இதோ, நான் உம்மைப் பற்றி — கண்ணீர் விட்டண்டினேன்; — மரிக்கும் உம்மைக் கட்டி — அணைத்துக் கொள்ளுவேன்.

7. என் ஏழை மனதுக்கு — நீர் பாடுபட்டதே — மகா சந்தோஷத்துக்கு பலிக்கும், மீட்பரே. — என்சீவனே, நான் கூடி — இச்சிலுவையிலே — உம்மோடென் கண்ணை மூடி — மரித்தால் வாசியே.

8. நான் உம்மைத் தாழ்மையாக — வணங்கி, நித்தமே — நீர் பட்ட கஸ்திக்காக — துதிப்பேன், இயேசுவே, — நான் உம்மில் ஊன்றி நிற்க — சகாயராயிரும்; — நான் உம்மிலே மரிக்க — நீர் கட்டளையிடும்.

9. நான் மாளுங் காலம் வந்தால் — பிரிந்திராதேயும்; — நான் தொய்ந்துபோய்க் கிடந்தால், — தரிசனை கொடும். — என் மனக்கிலேசம் மெத்த — பாடாம் எந்நேரமும்; — நீர் சிந்தின இரத்த — பலத்தால் இரட்சியும்.

10. என் மூச்சொடுங்கும் அந்த — கடை இக்கட்டிலும் — நீர் எனக்காய் இறந்த — ரூபாகக் காண்பியும்; — அப்போ நான் உம்மைப் பார்த்து — கண்ணோக்கி, நெஞ்சிலே — அணைத்துக்கொண்டு காத்து — தூங்கட்டும், இயேசுவே.

## 8. Christe, du Lamm Gottes. (46.)

பாவத்தைச் சுமந்த — தேவ ஆட்டுக்குட்டி, — அடியார் மேல் இரங்கும்.

2. பாவத்தைச் சுமந்த — தேவ ஆட்டுக்குட்டி, — அடியார் மேல் இரங்கும்.

3. பாவத்தைச் சுமந்த — தேவ ஆட்டுக்குட்டி, — நீர் சமாதானந் தாரும், ஆமேன்.

## 9. Die Seele Christi heil'ge mich. (50.)

மரிக்குங் கிறிஸ்தின் ஆவியும் — வதைக்கப்பட்ட தேகமும் — என் தேகம் ஆவி யாவையும் — நன்றாய்க் குணப்படுத்தவும்.

2. அவர் விலாவால் மிகவும் — பொழிந்த ரத்தந் தண்ணீரும் — என் ஸ்நானமாகி, எனக்கு — உயிர் தரக் கடவது.

3. அவர் முகத்தின் வேர்வையும் — கண்ணீர் அவஸ்தை துக்கமும் — அந்நாளின் தீர்ப்பழிப்புக்கும் — இப்பாவியை விலக்கவும்.

4. ஆ, இயேசு கிறிஸ்தே, உம்மண்டை — ஒதுக்கைத் தேடும் ஏழையை — நீர் பட்ட காயங்களிலே — மறையும், நீர் என் மீட்பரே.

5. என் மரண அவஸ்தையில் — நீர் என்னைத் தேற்றி, மோட்சத்தில் — நான் என்றும் உம்மைத் தொழவே — வரவழையும் கர்த்தரே.

## 10. O Lamm Gottes unschuldig. (51.)

மாசற்ற ஆட்டுக்குட்டி, — நீர் சிலுவையில் தொங்கி, — எல்லார் கடன் செலுத்தி, — இரக்கத்தாலே பொங்கி, - பொல்லாப்பைச் சாதால் வென்றீர். — பொல்லாருக்காகச் சென்றீர் - அடியார் மேல் இரங்கும்.

2. மாசற்ற ஆட்டுக்குட்டி, மு. — அடியார் மேல் இரங்கும்.

3. மாசற்ற ஆட்டுக்குட்டி, மு. — நீர் சமாதானந் தாரும், ஆமேன்.

## 11. Erschienen ist der herrlich Tag. (59.)

இந்நாளே கிறிஸ்து வெற்றியை — சிறந்தெல்லாப் பகைஞரை — சிறைபிடித்துக் கொண்டுபோம் — செயநாள் என்று பாடுவோம். — அல்லேலூயா.

2. பேய் பாவஞ் சாவு நரகம் — எக்கேடும் இன்றையத் தினம் — எழுந்த கிறிஸ்தின் காலுக்கு — கீழாய் விழுந்து கெட்டது. — அல்லேலூயா.

3. இஸ்திரிகள் ஞாயிற்றுக்கிழமை — விடியற்காலங் கர்த்தரை — கெபியில் பார்க்க வரச்சே — முன் தான் எழுந்திருந்தாரே. — அல்லேலூயா.

4. கெபியைத் தூதன் காண்பித்து: — இங்கில்லே, வெற்றியாச்சுது; — உயிர்த்தெழுந்தார் என்றுதான் — போய் அறிவியுங்கள் என்றான். — அல்லேலூயா.

5. இரண்டு சீஷரோடன்றே — வழியில் கர்த்தர் பேசச்சே, — பேரின்பம் மூண்டு பிறகு — ஆர் என்றறியலாச்சுது. — அல்லேலூயா.

6. அந்நாளில் சீஷர் கர்த்தரின் — தரிசனையைப் பார்த்தபின் — துக்கித்தவர்கள் நெஞ்சுக்கு — சந்தோஷப் பூரிப்பாச்சுது. — அல்லேலூயா.

7. இச்சிம்சோன் துஷ்ட சிங்கத்தை — செயித்ததின் அரண்களை — தகர்த்துப்போட்ட பராக்கிரமர், — அத்தால் நாம் நீங்கலானவர். — அல்லேலூயா.

8. மூன்றே நாளாய் மீன் யோனாவை — பிடித்திருந்த திவரை — அதிகக் காலமாய்க் குழி — அடைத்திருப்பதெப்படி. — அல்லேலூயா.

9. சாவால் விழுங்கப்பட்டபின் — அவர் தெய்வீக சீவனின் — பலத்தால் சாவைப் போக்கினார், — செத்தோருக்கும் உயிர் தாரார். — அல்லேலூயா.

10. எகிப்துக்கின்று நீங்கிரோம் — சிறையிருப்பு தீர்ந்துபோம்; — ராப்போசனத்தில் கிறிஸ்து தாம் — நாம் உண்கிற மெய்ப்பஷாவாம். — அல்லேலூயா.

11. புளிப்பில்லாத அப்பமாம் — நல்மார்க்கப்போதகத்தை நாம் — வழங்கிக்கொண்டிருக்கிறோம், — புளித்தமாவைத் தள்ளுவோம். — அல்லேலூயா.

12. சங்காரன் கிறிஸ்து தோழத்தில் — உள்ளோரைத் தொடான்; ஏனெனில் — நாம் தப்ப அவர் ரத்தத்து — விளாசம் நம்மைக் காக்குது. — அல்லேலூயா.

13. ஆகாசம் பூமி பொழுதும் — முன் துக்கமாம் எச் சிஷ்டியும் - இந்நாளில் லோகப்பிரபு - விழுந்ததால் மகிழுது. - அல்லேலூயா.

14. ஆ, எங்கள் ஆருசனுக்கே — எழுந்த இயேசு கிறிஸ்துவே, — செயித்த உமக்கென்றைக்கும் — இஸ்தோத்திரம் உண்டாகவும். — அல்லேலூயா.

## 12. Komm, Gott Schöpfer, heiliger. (77.)

அடியார் நெஞ்சைத் தயவாய் — சந்தித்து ரப்பி உமக்கே — பொருந்தும் அலங்காரமாய் — படையும், தேவ ஆவியே.

2. மெய்த் தேற்றரவளிக்கிற — பர ஈவாயிருக்கிறீர்; — வானுபிஷேகமாகிய — சீவாறும் நேசத்தீயும் நீர்.

3. பல வரம் நடத்திய — நீர் தம்பிரானுட விரல்; — தெய்வீக சொல் புறப்பட — உம்மால் படியும் பாஷைகள்.

4. வெளிச்சந் தாரும் அறிவில், — சுடன்பை நெஞ்சிலே கொடும்; — சதையின் பலவீனத்தில் — பலம் உண்டாக்கியருளும்.

5. அடியார் எச்சரிக்கையாய் — நீர் ஏவும்போல் நடக்கவே, — பிசாசின் சூதைத் தூரமாய் — விலக்கும், மணவாசரே.

6. பிதா சுதனையும் நன்றாய் — அறிந்து அண்டிக் கொள்ளவே — நீர் எங்கள் தெய்வ வாத்தியாய் — இரும் இருவர் ஆவியே.

7. திரியேக தெய்வமாகிய — பிதா குமாரன் ஆவிக்கும் — எப்போதென்றைக்குஞ் சகல — புகழ்ச்சியும் உண்டாகவும்.

## 13. Allein Gott in der Höh sei Ehr. (91.)

தெய்வன்புக்காக உன்னத — கர்த்தாவுக்குப் புகழ்ச்சி ஏன், பாவக்கேட்டை நீக்கின — அது மகா திரட்சி. — மெய்ச்சமாதானம் என்றைக்கும் — நராட்கள்மேல் பிரியமும் — உண்டாம் இரக்கம் பெற்றோம்.

2. மாறாமல் ஆண்டிருக்கிற — மகத்துவ பிதாவே, — துதியோடும்மைக் கும்பிட — பணிகிறோம், கர்த்தாவே, — அளவில்லாப் பலமாய் நீர் — நினைத்த யாவுஞ் செய்கிறீர்; — மா பாக்கியர் அடியார்.

3. ஆ, இயேசு, தேவ மைந்தனே, — கடன்களைச் செலுத்தி — கெட்டோரை மீட்ட மீட்பரே, — மாசற்ற ஆட்டுக்

குட்டி, — மா கர்த்தரே, தயாபரா, — நீர் எங்கள் சத்தங் கேட்டெல்லா — சபையின்மேல் இரங்கும்.

4. மெய்யாகத் தேற்றும் உன்னத — தேவாவி, நீர் அன்பாக — இறங்கி, கிறிஸ்து தம்முட — சாவால் பிரியமாக — மீட்டோரைச் சாத்தான் கண்ணியில் — விழாதே காத்து, துன்பத்தில் — செயிக்கப் பண்ணும், ஆமேன்.

## 14. Gott, der Vater, wohn uns bei. (92.)

ஆ, திரியேக சுவாமியே, — துணைசெய்தன்பாய்க் சாரும். — பாவம் நீக்கும், கர்த்தரே — நல் மரணத்தைத் தாரும், — பேயின் சூதைத் தவிரும், மெய் விசுவாசமாக - இருக்கிறதற்காக — வரம் அளிப்பீராக. — உம்மை நம்பப் போதியும், — பிசாசு அம்பை எய்யும் — எச்சோதனையிலேயும் — நீர் அனுகூலஞ் செய்யும். — ஆமேன், — அது நிச்சயம், — தயாபரர்க்கிஸ்தோத்திரம்.

## 15. Befiehl du deine Wege. (109.)

உன் நெஞ்சிலே உண்டான — விசாரங்களை நீ — கர்த்தாவின் உண்மையான — கரத்துக்கொப்புவி. — விண்மண்ணை ஆண்டிருக்கும் — நரதயாபரர் — உன் காரியங்களுக்கும் — வழி உண்டாக்குவர்.

2. செயமடைந்து வாழ — கர்த்தாவைப் பிள்ளைபோல் நீ நம்பி, மனதார — பணிந்து பற்றிக்கொள். — உன் கவலைகளாலே — பயம் ரட்டிக்குது; — வேண்டாம். செபத்திலே — நீ வேண்டிக் கொண்டிரு.

3. ஏழை அடியாருக்கு — பிதாவாந் தேவரீர் — இன்னின்ன நேரங்களுக்கு — ஆம் என்று அறிவீர். — நீர் எதை நல்லதாக — கண்டீரோ, அதை நீர் — ஆம்போது பலமாக — வரவிடுகிறீர்.

4. பல வழி வகையும் — உம்மாலே ஏற்படும்; — நீர் செய்வது இசையும், — நீர் சொன்னது வரும். — நீர் வாக்குத்தத்தம் பண்ணி, — மொழிந்தது எல்லாம் — உம்மால் தடையுமன்றி — நற்காலத்தில் உண்டாம்.

5. பேய்க் கூட்டம் ஏகமாக — மா வற்மத்துடனே — எதிர்த்தும், அதுக்காக — கர்த்தர் பின்வாங்காரே, — ஏதேது

அவராலே — நிர்ணைக்கப் பட்டதோ. — அதற்கு யாதொன்ருலே — மாருட்டம் வருமோ.

6. இக்கட்டுகளினுலே — கலங்கிஞேனே, நீ — திடன்கொள், கர்த்தராலே — இக்கட்டின் ராத்திரி — சந்தோஷமாக மாறும், — சற்றே பொறுத்திரு; — நீ பூரிப்பாய்க் கொண்டாடும் — நாள் வரப்போகுது.

7. உன் கவலைகளுக்கு — இன்றே விடைகொடு, — இனி விசாரத்துக்கு — இடங்கொடாதிரு. — நீ ஆளுந் தேவன் அல்ல, — நீ பூச்சி என்றறி, — சர்வத்துக்கும் வல்ல — சர்த்தர் அதிபதி.

8. பராபரன் ஆளட்டும். — திவ்விய கை எல்லாம் — மா ஞானமாய் நடத்தும்; — உன் பேரிலே உண்டாம் — மப்பான கவலைக்கு — தெய்வீக செயலாய் — தெளிவுண்டாம்; அன்றைக்கு — நன்ருய் மகிழுவாய்.

9. மெய்தானே, சிலநாளும் — தேற்ருமல், உனது — இக்கட்டை ஒருக்காலும் — தாம் நீக்க மனது — இல்லாதோர் போல் ஒளிப்பார், — உன் அவதியிலே — ரட்சிக்கத் தாமதிப்பார்; — ஆனுல் திகையாதே.

10. நீ பத்தியை விடாமல் — பொறுத்திருக்கையில், — கர்த்தர் நீ நினையாமல் — இருக்கும் நேரத்தில் — உன் துக்கத்தை அகற்ற — வெளிச்சங் காண்பிப்பார்; — நீ நன்மைக்காகப்பட்ட — சலிப்பை நீக்குவார்.

11. அச்சடவாய்ப் பலைத்த — செயமும் பூரிப்பும், — ஆசீர்வதிக்கப்பட்ட — தெய்வீக தேற்றலும் — அடைந்து, இன்பமான—மனமகிழ்ச்சியாய் — அன்புள்ள மீட்பரான — கர்த்தாவைப் பாடுவாய்.

12. கர்த்தாவே, எங்களுக்கு — எல்லா இக்கட்டிலும் — இரட்சிப்பளிப்பதற்கு — நேரிட்டுக் கொண்டிரும், — ஆ, எங்களைத் திடத்தும்; — பரகதிக்குப் போம் — வழியிலும் நடத்தும்; — அப்போ பிழைக்கிஞேம்.

## 16. Ach bleib bei uns, Herr Jesu Chr. (116.)

ஆ, இங்கே எங்களுடனே — இரும், அன்புள்ள இயேசுவே; — மெய் வேதத்தின் விளக்கை நீர் — போராமல் வைக்கக் கடவீர்.

2. இக்கடைசித் துன்னுளிலே — இங்கும்முடைய வார்த்தையே — தன் முத்திரைகளோடேயும் — தரிக்கக் கட்டளையிடும்.

## 17. Herr Jesu Christ, dich zu uns. (118.)

ஆ, இயேசுவே, நீர் எங்களை — அன்பாய்ச் சேர்ந்துமதாவியை — அருள் அனுக்கிரகத்தையும் — தந்தெங்கள் மேய்ப்பராயிரும்.

2. பரத்தில் நாங்கள் சுவாமியே, — நீர் சுத்த சுத்த சுத்தரே — என்றேதி, உம்மை என்றைக்கும் — களிப்பாய்ப் பார்க்குமளவும்.

3. வாய் உம்மைப் போற்றி, மனது — தெய்வன்பை நன்றாய் யோசித்து, — உணர்வும் விசுவாசமும் — பலக்கக் கட்டளையிடும்.

4 ஒன்றாக ஆண்டிருக்கிற — திரியேக தெய்வமாகிய — பிதா குமாரன் ஆவிக்கும் — இஸ்தோத்திரம் உண்டாகவும்.

## 18. Wir Menschen sind zu dem. (122.)

கர்த்தாவே, நாங்கள் எங்களில் — மெஞ்ஞானத்துக்காகாதோர். — நீர் அறிவைத் தராகில் — அடியார் அறியாதோர். — நீர் அருளின வேதமும் — அத்தோடே உமதாவியும் — வெளிச்சங்காட்டவேணும்.

9. ஆ உம்முடைய வார்த்தையை — நீர் சுத்தமானதாக — அடியாருக்குக் காத்ததை — எங்கள் வெளிச்சமாக — இருக்கப்பண்ணி, சாவிலும் — அத்தால் பலந்திடனையும் — நற்புத்தியையுந் தாரும்.

10. பிதாவே எங்கும், உம்முட — நல்வார்த்தை சேர்வதாக; — ஆ, இயேசுவே, நீர் காட்டிய — வழியே செல்வோமாக; — தேவாவி, எங்கள் உள்ளத்தில் — நீர் தங்கி, வார்த்தையால் அதில் — நற்சீரை உண்டு பண்ணும்.

## 19. Liebster Jesu, wir sind hier. (129.)

இயேசு சுவாமி, உமது — வசனத்தின் பாலைத் தேட — வந்தோம், எங்கள் மனது — மண்ணை விட்டு உம்மைச் சேர, —

எங்கள் சிந்தையை நீர் முற்றும்—தெய்வசொல்லுக்குள் படுத்தும்.

2. உமதாவி எங்களில்—அந்தகாரத்தை அறுத்து,—ஒளியை வீசாராகில், — புத்திக்கண் ணெல்லாம் இருட்டு. — சீர் உண்டாகும் நற்சிந்திப்பு—உம்முடைய நடப்பிப்பு.

3. மகிமையின் சோதியே,—சுவாமி, நாங்கள் மாயமற— பாடிக் கெஞ்சி நெஞ்சிலே—வசனத்தைக் கேட்டுணர,—வாய் செவி மனமுங் கண்ணும்—திறவுண்டு போகப் பண்ணும்.

## 20. O Gott, da ich gar keinen Rath. (130.)

பிதா குமாரன் ஆவியே, — நான் உம்மைப் போற்றி வந்து,— நான் அன்று தந்த வார்த்தைக்கே— இசைவாய்த் தான் நடந்து,— முடிய பாவத்துக்கென்னில்—இடங்கொடாமல், மோட்சத்தில்—உம்மண்டை சேர்வேனாக.

## 21. Allein zu dir Herr Jesu Christ (162.)

ஆ, இயேசுவே, இப்பூமியில்—என் தேற்றரவு நீரே.— என் நம்பிக்கை நீர், ஏனெனில்—என் மீட்பர் தேவரீரே,— புவியில் உம்மைத் தவிர — ஓர்க்காலும் ஆரும் என்னுட—இக் கட்டை நீக்கக் கூடாதே.—என் இயேசுவே,—நான் பற்றும் ரட்சகர் நீரே.

2. என் பாரப் பாவங்களினால்—என் மனது கலங்கும்;— நீர் பாடுபட்டு மாண்டதால்—ரட்சித்தென்மேல் இரங்கும்.— பிதாவிடத்தில் இப்போதும் — என் மத்தியஸ்தராயிரும். — அப்போ நான் நீங்கலாகிறேன். — காப்பாற்றுமேன், — நான் தேவரீரை நம்பினேன்.

3. மெய்யான விசுவாசத்தை—இரக்கமாய் அளியும்;— என் கண்ணைத் தெய்வ தயவை — நான் பார்க்கத் தெளிவியும்.—நான் முழு நெஞ்சால் உம்மையும் — பிறரை என்னைப் போலவும்— நேசிப்பேனாக; சாவிலே—என்னண்டை பேய்— சேராதே காரும் இயேசுவே.

4. திரியேக சுவாமிக்குத் துதி—உண்டாயிருப்பதாக;— தெய்வீக சித்தத்தின்படி — நடக்கிறதுக்காக — பிதாவுடைய தயவும்—குமாரனின் சிநேகமும்—தேவாவியின் துணையுமே— என்னுடனே—இருப்பதாக நித்தமே.

## 22. O Gott, du Frommer Gott. (185.)

தயாபரா எல்லா—நல்லீவின் ஊற்றும் நீரே,—உண்டானதை எல்லாம்—அளித்தோர் தேவரீரே.—என் தேகம் ஆவிக்கும்—என் மனச்சாட்சிக்கும்—சீராயிருக்கிற—ஆரோக்கியங் கொடும்.

2. என் நிலைமையிலே—நீர் எனக்குக் கற்பித்து—கொடுத்த வேலையை—கருத்தாய் நான் முடித்து,—நான் தக்க வேளையில்—ஒவ்வொன்றைச் செய்யவும்,—என் செய்கை வாய்க்கவும்—சகாயமாயிரும்.

3. எப்போதும் ஏற்றதை—நான் வசனிப்பேனாக,—வீண்பேச்சென் நாவிலே—வராதிருப்பதாக.—என் உத்தியோகத்தில்—நான் பேசவேண்டிய—சொல் விதனமில்லா—பலத்தைக் காண்பிக்க.

4. துன்னாளிலே பயம்—இல்லா முனையைத் தாரும்,—சுமை சுமருகில்—நீர் தாம் துணையாய் வாரும்.—சாதால் பகைஞனை—நான் வென்றெந்நேரமும்—நல் யோசனைகளை—உம்மாலே காணவும்.

5. அனைவரோடேயும்—கிறிஸ்தோனுக் கேற்குமட்டும்—சிநேகம் அன்புமாய்—நான் சீவனம் பண்ணட்டும்.—நீர் ஆஸ்தியைத் தந்தால்,—அத்தோடே என்றைக்கும்—அநியாய உடைமை—சேராதிருக்கவும்.

6. பலவருத்தமாய்—முதிர்ந்த வயதுக்கு—நான் ஏறக்கட்டளை— ஆனால், அந்நாட்களுக்கு—வினையும் லச்சையும்—இல்லா நரையையும்—நற்பொறுமையையும்—நீர் கடாட்சம் பண்ணவும்.

7. என் சாவில் கிறிஸ்துவின்—சாவால் ஜெயிப்பேனாக; - பிரிந்த ஆவியை — உம்மண்டை சேர்ப்பீராக. — சவத்துக் கோவெனில்—நல்லோர் கிடக்கிற—குழிகள் அருகே—இடம் அகப்பட.

8. செத்தோரை நீர் அந்நாள்—எழுப்பும் போதன்பாக—என் மண்ணின் மேலேயும்—வா என்ற சத்தமாக—கை நீட்டி. எனக்கு—நீர் சீவனுடனே—வானோரின் ரூபத்தை—அளியும், கர்த்தரே.

## 23. Was frag ich nach der Welt. (296)

சீர்கெட்ட லோகமே,—உன் வாழ்வு எனக்கேது;—என் இயேசு என் கதி,—நான் உன்னை சார்வதேது—என் ஆஸ்தி இயேசுதான்,—என் செல்வம் அவரே.—உன் குப்பையை நாடேன்,—சீர்கெட்ட லோகமே.

8. என் இயேசு என்கதி,—என் இயேசு என் களிப்பு,—என் இயேசு என் கனம்,—என் இயேசு என் ரட்சிப்பு,—என் ஜீவன் அவரே.—என் மோட்சம் அவரே.—நீ சாரமற்றது,—சீர் கெட்ட லோகமே.

## 24. Fin feste Burg ist unser Gott. (264.)

கர்த்தர் தான் எங்கள் துர்க்கமும்—அரண் பலமுமாமே,- உண்டாம் இக்கட்டனைத்தையும்—சுழிப்பர் அவர் தாமே.—பொல்லாங்கனின் சினம்—இப்போ மா விஷம்,—துஷ்டனுஞ் சூதையும்—அணிந்து, உறுமும்—நிகர் புவியில் இல்லை.

2. எதற்கு நாங்கள் வல்லவர்—இந்நீசர் சத்தியற்றோர்;- எங்களுக்காய் வேறொருத்தர் — போர் செய்வதற்கேற்பட்டோர்.—ஆர், இயேசு கிறிஸ்து தான்—இந்த பலவான்—எங்கள் ரட்சகர்,—சேனைபதி அவர்,—செயிப்பர் அவர் தாமே.

3. விழுங்க வாற பேய்களால்—பூலோகம் ரம்பினாலும்,- பயப்படோம், கர்த்தாவினால்—எதிர்த்து நிற்கத் தாளும்.—இருளின் பிரபு—சீறியும், அது—வெல்லப்பட்ட பேய்,—தள்ளுண்கத் தீர்ந்ததே;—ஓர் சொல்லினால் முறியும்.

4. பகைஞர் தெய்வ வார்த்தையை—பகைத்தும், அது நிற்கும்;—கர்த்தர் சகாயர் அவர் கை—வரந் தந்தாதரிக்கும்.—மாற்றான்கள் யாவையும்—ஜீவனைத்தானும்—வாங்கினால், கேடோ.—இராச்சியம் அல்லோ—எங்களுக்கே இருக்கும்.

## 25. Nun danket alle Gott. (274.)

அதிசயங்களை—எல்லா இடமுஞ் செய்யும்—கர்த்தாவை வாக்கினால்—இருதயத்திலேயும்—துதியுங்கள், அவர்—நாம் ஜென்மித்த நாளே—முதல் இம்மட்டுக்கும்—இரக்கஞ் செய்தாரே.

2. நரதயாபரர்—முடிய ஆதரித்து,-நற்சமர்தானத்தால்-மகிழ்ச்சியை அளித்து—தயையை நம்முட—மேல் வைத்தெந்நேரமும்—ரட்சித்து, தீமையை—எல்லாம் விலக்கவும்.

3. உன்னதமாகிய—விண் மண்டலத்திலுள்ள—மாறுத உண்மையும்—தயையும் அன்புமுள்ள—பிதா சுதனுக்கும்—திவ்விய ஆவிக்கும்—எத்தேச காலமும்—துதி உண்டாகவும்.

## 26. Herr Gott, Dich loben Wir. (286.)

**ப**ணிந்து உம்மையே—துதிப்போம், கர்த்தரே.—திரியேக சுவாமி, உமக்கு—விண் மண் புகழ் செலுத்துது.—எல்லாப் பரத்துச் சேனையும்—வெளிச்ச கேருபீன்களும்—சாஷ்டாங்கமாகக் கும்பிட்டு—இடிம் முழக்கமாவது:—மாசற்ற சுத்தரே,—மாசற்ற சுத்தரே,—மாசற்ற சுத்தரே,—அனாதி வஸ்துவே,

2. நீர் யாவையும் வியாபித்து,—சுமந்து ஆண்டோர் என்குது.—தூதாக்களோடப்போஸ்தலர்,—தெய்வீக திஷ்டி புருஷர்,—செயித்த சாட்சிகள் எல்லார்,—கர்த்தாவே, உம்மைப் போற்றுவார்.—செகத்திலுள்ள உம்முட—சபை பணிந்து உன்னத—பிதாவே, உம்மை நித்தமும்—உம்மோடொன்றுஞ் சுதனேயும்—தேவாவியையுங் கும்பிட்டு,—வணங்கி ஸ்தோத்திரிக்குது.

3. ராசாதி ராசா இயேசுவே,—அனாதி தேவ மைந்தனே,—நரரை மீட்க, தாழ்மையாய்—பிறந்து சாவைப் பலமாய்—பரிகரித்து மோட்சத்தின்—பதவியைத் திறந்த பின்—பிதாவின் பாரிசத்தில் நீர்—போய் உளுக்கார்ந்திருக்கிறீர்.—உயிருள்ளோர் செத்தோர்களே—நீர் நியாயந்தீர்க்கிற துரை.

4. நீர் ரத்தஞ் சிந்தித் தேடின—சபையை ரட்சியும் கர்த்தா.—எல்லா வானோர்களோடேயும்—அடியார் பேரை எழுதும்.—ஆ, கிறிஸ்துவே, நீர் உமது—சனத்தை மேய்த்துக் கடாட்சித்து,—ஆசீர்வதித்து என்றைக்கும்—பரமினுக்கால் சோடியும்.

5. தினம் எப்போதும் உமக்கே—இஸ்தோத்திரம், திரியேகரே.—பேய் பண்ணும் மோசம் யாவையும்—விலக்கி, எங்களோடிரும்.—நீர் எங்கள் ஆபத்தில் மகா—அன்பாயிரும், தயாபரா.—அடியார் நம்பிவாஞ்சிக்கும்—படி இரக்கங் காண்

பியுர்.—கர்த்தாவே உம்மை நம்பினோம்.—கெடாதிருக்கக் கட வோம்.—ஆமேன்.

## 27. Gott des Himmels und der. (325.)

ஆ, பிதா குமாரன் ஆவி, — விண் மண் உலகை எல்லாம் — தாங்கும் சருவ வியாபி, — உம்மால் ராப்பகலுமாம். - உம்மால் சூரியன் நிலா — ஓடுது, தயாபரா.

2. சாத்தான் தீவினை வீணாக,—என்னைப் போன ராவிலே—தேவரீர் மா தயவாக—கேடும் தீதும் அன்றியே—காத்ததுக்கென் மனது — தேவரீரைப் போற்றுது.

3. ராப்போனாப் போல் பாவ ராவும்—போகப்பண்ணும், கர்த்தரே.—அந்தகாரம் சாபம் யாவும் — நீங்க உம்மை, இயேசுவே,—அண்டிக்கொண்டு நோக்கிறேன்,—உம்மால் சீர் பொருந்துவேன்.

4. நியாயத் தீர்ப்பில் திகிலற்று — நிற்க இப்போதுள்ளிலும்—வெண்ணுடை உடுத்தப்பட்டு, — பயத்தோடே நித்தமும்—என் ரட்சிப்பைத் தேட, நீர்—ஈவளிக்கக் கடவீர்.

5. வேதங் காண்பிக்கும் வழியில் — என்னை நீர் நடப்பியும்,—இன்றும் ஒவ்வொரு அடியில்—என்னை ஆதரித்திரும்;—எனக்கு நீர் மாத்திரம்—பத்திர அடைக்கலம்.

6. தேகம் ஆவி என்னிலுள்ள — சிந்தை புத்தி யாவையும்,—சுவாமி உமதுண்மையுள்ள — கைக்கும் பராமரிப்புக்கும்—ஒப்புவிப்பேன், என்னை நீர் — பிள்ளையாக நோக்குவீர்.

7. வானதூதர் எனக்காக, — என்னைப் பேயின் கண்ணிக்கு — தப்புவிக்கவும், அன்பாக — கடைசியில் மோட்சத்து—வாழ்வில் கொண்டுபோகவும்—தயவாகக் கற்பியும்.

8. என் செபத்தை ஏற்றுக்கொள்ளும் — ஆ, திரியேக வஸ்துவே; — என் மனுக்காமென்று சொல்லும், — வேண்டிக் கொள்ளச் சொன்னீரே. — ஆமேன், உமக்கென்றைக்கும் — தோத்திரம் புகழ்ச்சியும்.

## 28. Werde munter, mein Gemüthe. (334.)

ஆசீர்வாதந் தந்து காரும், — எனக்கிந்த ராவிலே — சுக நித்திரையைத் தாரும்; — உமதாதரிப்புக்கே — விட்டார்

இனத்தார்களும்—நேசரும் பகைஞரும்—ஆவி தேசம் எல்லாமாக—ஒப்புவித்திருப்பதாக.

11. அமளி, திகில், வியாதி, — உயுத்தத்தின் கலகம்,— தீயின் வெள்ளத்தின் உபாதி,— பெருவாரி விக்கினம்,—அசுப்பான அழிவும்—அணுக ஒட்டாதேயும்.—கர்த்தரே, நான் பாவியாக—செத்துக் கெட்டுப்போகேனாக.

12. அப்பா, என் விண்ணப்பத்துக்கு — தயவாய்ச் செவிகொடும் — இயேசுவே, என் மனதுக்கு — நித்த ஒளிவாயிரும். — பரிசுத்த ஆவியே, — நேச அனுகூலரே, — வேண்டினோன் மேல் தயவாகும்;—ஆமேன் உம்மால் யாவும் ஆகும்.

## 29. Nun ruhen alle Walder. (338.)

வெளியில் ஊரில் யாவும் — எல்லாச் சீவாத்துமாவும் — இப்போதமையுது.—என்மனதே, நீ பாடி,—உன் கர்த்தரைக் கொண்டாடி,—செபத்தியானமாயிரு.

2. பகலோன் அஸ்தமித்து,—ரா வந்ததால் ஒளித்து,— காணாமல் போச்சுது;—போகட்டும், இயேசுவான—பகலோன் என்ற ஞான—வெளிச்சமே என் பூரிப்பு.

3. பகல் முடிந்த பின்னும்—நட்சத்திரங்கள் மின்னும்— விண் மண்டலத்திலே,—என் நாளின் வேலையான—பிற்பாடவ் வண்ணமான—சிங்காரந் தாரும், கர்த்தரே.

4. என் சிறுமையிருப்பை — காண்பிக்கிற உடுப்பை — இப்போ களைகிறேன்;—அதற்குப் பதிலாக — அந்நாளிலே நன்றாக—அலங்கரிக்கப்படுவேன்.

5. இந்நாளின் வேலையாலும்—தலையுங் கையுங் காலும்— சலித்துப் போச்சுது.—ஆனால் இனி எப்பாடும்—எப்பாவக்கேடும் மாறும்,—என் மனதே, மகிழ்ந்திரு.

6. இப்போதுஞ் சுகமாக — படுத்துக்கொள்வாயாக, — இளைத்த தேகமே; — ஆயாசமெல்லாம் ஆற, — இனி படுக்கை தாழ—அகப்படும், குழியிலே.

7. உறக்கத்தால் கண்மூடும், — இருட்டும் என்னைச் சூழும்;—ஆனால் என் சுவாமியே,—என் ஆவிதேகத்துக்கும் — சதிவராதிருக்கும்—படிக்குக் காப்பவர் நீரே.

8. இக்குஞ்சைப் பட்சமாக— அரவணைப்பீராக,— அன்புள்ள இயேசுவே; — பேய்தந்திரம் வீணாக, — நற்றூதர் காவலாக—இருக்கப்பண்ணும், கர்த்தரே.

9. அடுத்தவர்கள் மீதும்—இராவில் கேடுங் தீதும் — வராமல், யாவரும்—அருள் நிழலின் கீழே—சுகித்துத் தூங்க, நீரே—அன்பாகக் கட்டளையிடும்.

## 30. Laudamus te. (360,)

உம்மைத் துதிக்கிறோம், யாவுக்கும் வல்ல பிதாவே,—உம்மைப் பணிகிறோம், சுவாமி, ராசாதி ராசாவே,—உமது மா—மகிமைக்காக, கர்த்தா,—ஸ்தோத்திரஞ் சொல்லுகிறோமே.

2. கிறிஸ்தே, இரங்கும்; குமாரனே, கடன் செலுத்தி,—லோகத்தின் பாவத்தை நீக்கிற தேவாட்டுக் குட்டி,—எங்கள் மனு—கேளும்; பிதாவினது—ஆசனத்தோழா, இரங்கும்.

3. நித்த பிதாவின் மகிமையில், இயேசுவே, நீரே—பரிசுத்தாவியோடேகமாய் ஆளுகிறீரே.—ஏகமாய் நீர்—அர்ச்சிக்கப்படுகிறீர்,—உன்னதகர்த்தரே. ஆமேன்.

## 31. Lass mich Dein sein undbleiben. (362.)

நான் என்றும், உண்மையுற்ற—சுவாமி, உம்மிடத்தில்—விடாமல் நிற்க சுத்த—மெய் உபதேசத்தில்—நீர் என்னைக் காத்திரங்கும்,—நிலைவரங் கொடும்;—அதற்கு இங்கும் அங்கும்—நான் உம்மைப் போற்றவும்.

## 32. Cor mundum crea in me. (364)

சுத்த இருதயத்தை நீர்—கர்த்தாவே, என்னில் சிஷ்டியும்;—திட ஆவியைத் தேவரீர்—என் உள்ளத்தில் புதுப்பியும்.

2. ஆ, உம்முடைய முகத்தை—விட்டென்னை நீர் தள்ளாமலும்,—என்னிடத்தில் தேவாவியை—பேர்த்தெடுக்காமலும் இரும்.

3. மீண்டும் உமதிரட்சிப்பின்—சந்தோஷத்தைத் தந்தருளும்.—இனி புதிய ஆவியின்—உற்சாகம் என்னைத் தாங்கவும்.

# நாலாம் பங்கு.

## கிறிஸ்துமார்க்க உபதேசத்தின்

## முதற்பால்.

1. இந்த உலகத்திலே நமக்கு எப்போதும் பிரதான கவலை யாயிருக்க வேண்டியதென்ன.
   விடை. பராபரனுடைய கிருபையைத் தேடுகிறதுங் காக்கிறதும், மோட்சம் அடைகிறதுந்தானே.
2. அதற்கான வழியை நமக்குக் காண்பிக்கிறவர் ஆர்.
   வி. பராபரன் தாமே தம்முடைய பரிசுத்த வசனத்திலே அதை நமக்குக் காண்பிக்கிறார்.
3. அவருடைய பரிசுத்த வசனம் எங்கே எழுதியிருக்கிறது.
   வி. வேத புஸ்தகத்திலே.
4. அதிலே நம்மோடு பேசுகிறவர் யார்.
   வி. பராபரன்.
5. ஆதலால் அவருடைய வசனத்தை நாம் எப்படி கேட்க வேண்டும்.
   வி. கவனத்தோடும் மகா எண்ணத்தோடும் அதைக் கேட்க வேண்டும்.
6. நாம் அவருடைய வசனத்தை எங்கே வைத்து வைக்க வேண்டும்.
   வி. நம்முடைய இருதயத்திலே.
7. பராபரனுடைய வசனத்தைக் கேட்டவுடனே நாம் செய்ய வேண்டியதென்ன.
   வி. அதற்குக் கீழ்ப்படிய வேண்டும்.
8. தேவவசனத்தை உணர்ந்து, அதின்படி செய்வதற்கு நாம் பராபரனிடத்தில் எதைக் கேட்டுக்கொள்ள வேண்டும்.
   வி. பரிசுத்த ஆவியின் வெளிச்சத்தையுங் கீழ்ப்படிகிற இருதயத்தையுமே.
9. வேதபுத்தகத்திலுள்ள உபதேசமெல்லாம் எத்தனை விதம்.
   வி. அது இரண்டு விதம்; அதாவது, நியாயப்பிரமாணமுஞ் சுவிசேஷமுந்தானே.
10. நியாயப்பிரமாணம் எப்படிப்பட்டதாயிருக்கிறது.

வி. பாவிகளுக்குப் பயமும் மனஸ்தாபமும் உண்டாக்குகிறதாயிருக்கிறது.

11. சுவிசேஷம் எப்படிப்பட்டதாயிருக்கிறது.
   வி. தெய்வீக மனஸ்தாபம் அடைந்த பாவிகளை ஆறுதல் பண்ணுகிறதாயிருக்கிறது.

---

12. எல்லாவற்றிற்கும் ஆண்டவர் ஆர்.
   வி. பராபரன்.
13. எத்தனை தேவர்கள் உண்டு.
   வி. ஒரே தேவன் உண்டு.
14. ஒரே தெய்வதத்துவத்திலே எத்தனை ஆட்கள் உண்டு.
   வி. பிதா குமாரன் பரிசுத்த ஆவியாகிய மூன்றுட்களுண்டு.
15. பிதாவினுடைய விசேஷித்த கிரியை என்ன.
   வி. சிருஷ்டிப்பு.
16. குமாரனுடைய விசேஷித்த கிரியை என்ன.
   வி. இரட்சிப்பு.
17. பரிசுத்த ஆவியினுடைய விசேஷித்த கிரியை என்ன.
   வி. பரிசுத்தமாக்குதல்.
18. பராபரன் எங்கே வாசம் பண்ணுகிறார்.
   வி. பரமண்டலங்கள் அவருடைய ஆசனமும் பூமி அவருடைய பாதபடியுமாயிருக்கிறது. ஆகிலும் அவர் நம்முடைய இருதயத்திலும் வாசம்பண்ணச் சித்தமாயிருக்கிறார்.
19. பராபரன் தம்முடைய சுபாவ மகிமையின்படியே என்னமாயிருக்கிறார்.
   வி. ஆவியாயிருக்கிறார்.
20. பராபரன் தம்முடைய பிரதான இலட்சணங்களின்படியே எப்படிப்பட்டவர்.
   வி. ஆதியந்தமில்லாதவர்,
   மாறாதவர்,
   சருவத்திற்கும் வல்லவர்,
   எல்லாவற்றையும் அறிந்தவர்,
   அளவற்ற ஞானமுள்ளவர்,
   எங்கும் நிறைந்தவர்,
   சத்தியமுள்ளவர்,

பரிசுத்தமுள்ளவர்,
நீதியுள்ளவர்,
தயவுங் கிருபையுமுள்ளவர்.

---

21. வானத்தையும் பூமியையும் அதுகளில் உண்டானதெல்லாவற்றையும் உண்டாக்கினவர் ஆர்.
வி, பராபரன்,
22. எப்போது பராபரன் எல்லாவற்றையும் உண்டாக்கினார்.
வி, ஆதியிலே.
23. எதினாலே எல்லாவற்றையும் உண்டாக்கினார்,
வி. தம்முடைய வார்த்தையினாலே.
24. பராபரன் எத்தனை நாட்களுக்குள்ளே உலகத்தைப் படைத்தார்.
வி. ஆறுநாட்களுக்குள்ளே; அதாவது,
௧-ம் நாளிலே வெளிச்சத்தையும்,
௨-ம் நாளிலே ஆகாயவிரிவையும்,
௩-ம் நாளிலே புல் பூண்டு விருட்சங்களையும்,
௪-ம் நாளிலே சூரியன் சந்திரன் நட்சத்திரங்களையும்,
௫-ம் நாளிலே பறவைகளையும் மச்சங்களையும்,
௬-ம் நாளிலே பூமியின் மிருகங்களையும், ஆதி மனிதரையும் உண்டாக்கினார்.
25. ஏழாம் நாளிலே பராபரன் என்ன செய்தார்,
வி. அவர் தம்முடைய கிரியையையெல்லாம் முடித்த பின்பு அவர் ஓய்ந்திருந்து, அந்த நாளைப் பரிசுத்தமாக்கினார்.
26. ஆதியிலே பராபரன் எத்தனை மனிதரை உண்டாக்கினார்.
வி. இரண்டு மனிதரை.
27. அவர்களுடைய பேர் என்ன.
வி. ஆதாம், ஏவாள்.
28. ஆதாமை என்னத்தினாலே உண்டாக்கினார்.
வி, மண்ணினாலே.
29, ஏவாளை என்னத்தினாலே உண்டாக்கினார்.
வி, ஆதாமின் விலாவில் எடுத்த ஒரு எலும்பினாலே.
30, அவர்களை ஆருடைய சாயலாகச் சிருஷ்டித்தார்.
வி, தம்முடைய சாயலாக.

31. அந்தத் தேவசாயல் என்ன.
வி. ஞானம், பரிசுத்தம், பாக்கியம்.

---

32. ஆதாமுக்கும் ஏவாளுக்கும் வாசஸ்தலமாகப் பராபரன் எந்த இடத்தைக் கட்டளையிட்டார்.
வி. ஏதேன் என்னுஞ் சிங்கார வனத்தை.

33. ஆகாரமாக அவர்களுக்கு எதைக் கட்டளையிட்டார்.
வி. தோட்டத்தினுடைய மரங்களின் கனிகளைத்தானே.

34. எந்தக்கனியை மாத்திரம் விலக்கக் கற்பித்தார்.
வி. தோட்டத்தின் நடுவிலிருந்த நன்மை தீமை அறியும் மரத்தின் கனியைத்தானே.

35. பராபரன் தோட்டத்தின் நடுவிலிருந்த அந்த ஒரே மரத்தின் கனியை விலக்கக் கற்பித்ததென்ன.
வி. அவர்கள் தங்கள் சிருஷ்டிகருக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்கிறதைத் தினந்தோறும் நினைக்கும்படிக்குத்தானே.

36. பராபரன் அவர்களை எப்படி எச்சரித்தார்.
வி. நீங்கள் இந்த மரத்தின் கனியைப் புசித்தால், சாவீர்களென்று எச்சரித்தார்.

37. ஆகிலும் பிசாசு வந்து, அவர்களை இச்சகமான பொய் வார்த்தைகளினாலே சோதித்தபொழுது, என்ன செய்தார்கள்.
வி. பராபரன் கொடுத்த நல்ல கற்பனையை மீறி, விலக்கப்பட்ட மரத்தின் கனியைப் புசித்தார்கள்.

38. அதினால் எதை இழந்தார்கள்.
வி. தேவசாயலை.

39. எப்படிப்பட்டவர்களானார்கள்.
வி. பாவிகளானார்கள்.

40. பிற்பாடு பராபரன் அவர்களுக்கு ஏதேனென்ற தோட்டத்திலே இருக்க உத்தரவு கொடுத்தாரா.
வி. இல்லை, அவர்களை வெளியே துரத்திவிட்டார்.

41. பராபரன் தம்முடைய இரக்கத்தினாலே அவர்களுக்கு எதை வாக்குத்தத்தம் பண்ணினார்.
வி. ஸ்திரியின் வித்தாகிய இரட்சகரை அனுப்புவோமென்று அவர்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணினார்.

---

42. ஆதாம் ஏவாள் என்றவர்களின் சந்ததியிலே பிறந்திருக்கிற எல்லா மனிதரும் தங்கள் சென்ம சுபாவத்தினால் எப்படிப்பட்டவர்களாயிருக்கிறார்கள்.
 வி. பாவிகளாயிருக்கிறார்கள்.
43. பாவமானதென்ன.
 வி. அநியாயமே.
44. பாவம் எத்தனை விதமாயிருக்கிறது.
 வி. இரண்டு விதம்; அதாவது, சென்மபாவமும் கருமபாவமும்.
45. சென்மபாவமாவதென்ன.
 வி. ஆதாமாலும் ஏவாளாலும் நமக்குச் சுதந்தரமாய்ப் பலித்த துர்க்குணம்.
46. கருமபாவமாவதென்ன.
 வி. மனிதர் தங்கள் நினைவுகளினாலும் வார்த்தைகளினாலுங் கிரியைகளினாலும் பராபரனுடைய பரிசுத்த சித்தத்துக்கேறாமல் செய்கிறதெல்லாம் கரும பாவமாம்.
47. பாவத்தினால் எத்தனை பெரிய தீமைகள் உண்டாயிற்று.
 வி. நாலு; பராபரனுடைய கோபமும், பிசாசின் வல்லமையும், சாவும், நரக ஆக்கினையுந்தானே.
48. இந்தத் தீமைகளுக்கு நீங்கலாகி, பராபரனுடைய கிருபையையும் இரட்சிப்பையும் சம்பாதிக்க நம்மில் தானே பெலனுண்டா.
 வி. இல்லை.
49. இரக்கமுள்ள பராபரன் நம்மை இரட்சிக்க ஆரைக் கொடுத்தனுப்பினார்.
 வி. தம்முடைய நேசகுமாரனை.
50. என்னத்துக்காக இந்த இரட்சகரைக் கொடுத்தனுப்பினார்.
 வி. அவர் நம்முடைய பாவங்களையெல்லாஞ் சுமந்து தீர்த்து, நம்மை இரட்சித்து, நமக்காகப் பாவமன்னிப்பையுஞ் சீவனையும் மோட்சத்தையுஞ் சம்பாதிக்கிறதுக்காகத்தானே.

---

51. பராபரனுடைய குமாரன் நம்மை இரட்சிக்கும்படிக்கு இவ்வுலகத்தில் வந்து ஆரிடத்திலே பிறந்தார்.
 வி. கன்னிமரியாளிடத்திலே பிறந்தார்.

52. எங்கே பிறந்தார்.
 வி. யூதேயா தேசத்திலிருக்கிற பெத்லகேம் ஊரிலே.
53. அவருடைய நாமமென்ன.
 வி. இயேசு கிறிஸ்து.
54. இயேசு என்பதற்கு அர்த்தமென்ன.
 வி. இரட்சகர்.
55. கிறிஸ்து என்பதற்கு அர்த்தமென்ன.
 வி. அபிஷேகம்பண்ணப்பட்டவர்.
56. எதினாலே அவர் அபிஷேகம்பண்ணப்பட்டார்.
 வி. பரிசுத்த ஆவியினாலே.
57. என்னத்திற்காகப் பரிசுத்த ஆவியினாலே அபிஷேகம் பண்ணப்பட்டார்.
 வி. அவர் நம்முடைய தீர்க்கதரிசியும், பிரதான ஆசாரியரும், இராசாவுமாயிருக்கிறதற்காகத்தானே.
58. இயேசு சுவாமிக்கு எத்தனை சுபாவங்கள் உண்டு.
 வி. இரண்டு; தேவ சுபாவமும் மனித சுபாவமுமாம்.
59. ஆகையால் அவர் எப்படிப்பட்டவராயிருக்கிறார்.
 வி. அவர் மெய்யான தேவனும் மெய்யான மனிதனுமாயிருக்கிறார்.
60. அவர் எங்கே வளர்ந்தார்.
 வி. நாசரேத்தூரிலே.
61. முப்பதாம் வயதிலே ஆரால் ஞானஸ்நானம் பெற்றார்.
 வி. யோவான் இஸ்நானகனால்.
62. எங்கே ஞானஸ்நானம் பெற்றார்.
 வி. யோர்தான் நதியிலே.
63. அப்போது பரிசுத்த ஆவி எந்த ரூபமாய் அவர்மேல் இறங்கினார்.
 வி. புறாரூபமாய்.
64. அச்சமயத்தில் வானத்திலிருந்துண்டான சத்தம் என்ன.
 வி. இவர் நாம் பிரியமாயிருக்கிற நம்முடைய நேச குமாரனென்கிற சத்தம்.
65. பிற்பாடு கிறிஸ்து வனாந்தரத்தில் எத்தனை நாள் உபவாசமாயிருந்தார்.
 வி. நாற்பதுநாள்.
66. அங்கே அவர் ஆராலே சோதிக்கப்பட்டார்.
 வி. பிசாசினால்.
67. கிறிஸ்து எதினாலே சோதனைக்காரனை மேற்கொண்டார்,

வி. பராபரனுடைய வசனத்தினுலே.

68. பிசாசு அவரை விட்டுப்போன பின்பு, அவருக்கு ஊழியஞ் செய்தவர்கள் ஆர்.
    வி. தெய்வதூதர்.

69. முப்பத்துமூன்று வயதுமட்டுங் கிறிஸ்து என்ன செய்துகொண்டிருந்தார்.
    வி. யூதருடைய தேசமெங்கும் போதகம்பண்ணி, அநேகம் அற்புதங்களைச் செய்துகொண்டிருந்தார்.

---

70. நம்முடைய இரட்சிப்புக்காகக் கிறிஸ்து நாதர் விசேஷமாய்ச் செய்ததென்ன.
    வி. அவர் நமக்காகப் பாடுபட்டு மரித்தார்.

71. அவர் குற்றமில்லாமல் பாடுபட்டதினுலே எதைச் சுமந்தார்.
    வி. நமதுமேல் என்றென்றைக்கும் வரவேண்டிய ஆக்கினையைச் சுமந்தார்.

72. கெத்சேமனே தோட்டத்தில் அவர் அனுபவித்த வேதனை என்ன.
    வி. ஆத்துமப்பாடான பெரிய வேதனை.

73. அன்று இராத்திரி அவரைக் கொடூரமான யூதருக்குக் காட்டிக்கொடுத்தவன் ஆர்.
    வி. அவர் சீஷரில் ஒருவனுகிய யூதா இஸ்காரியோத்து.

74. அப்போது அவர்கள் அவரைக் கட்டி, எங்கே கொண்டுபோனுர்கள்.
    வி. எருசலேமுக்குள்ளே அன்னு வீட்டிற்கும், பின்பு காயிபா வீட்டிற்குங் கொண்டுபோனுர்கள்.

75. காயிபாவின் வீட்டிலே இயேசுநாதரை என்ன செய்தார்கள்.
    வி. தாம் பராபரனுடைய குமாரனுகிய கிறிஸ்து என்று அவர் சொன்னபடியினுலே அவரை மரணத்துக்கு நேரஸ்தனுகத் தீர்த்தார்கள்.

76. அப்புறம் அவரை என்ன செய்தார்கள்.
    வி. அவரைத் தாடையில் அறைந்து, குட்டி, முகத்திலே துப்பி, நிந்தித்தார்கள்.

77. பின்பு விடியற்காலத்திலே யூதர் அவரை எங்கே அழைத்துக்கொண்டு போனுர்கள்.

வி. பொந்தியுப் பிலாத்தண்டையிலே.

78. பொந்தியுப் பிலாத்து என்பவன் ஆர்.
வி. அந்தத் தேசத்தை ஆளுகிற துரை.

79. அவனுக்கு முன்பாக யூதர் கிறிஸ்துவின் பேரில் எந்தக் குற்றத்தைச் சாட்டினார்கள்.
வி. அவன் தன்னை இராசா என்று சொன்னானென்கிற குற்றத்தைச் சாட்டினார்கள்.

80. அவர்கள் பொந்தியுப் பிலாத்துவை நோக்கி என்னத்தைக் கூப்பிட்டுக் கேட்டார்கள்.
வி. அவனைச் சிலுவையிலறையும், சிலுவையிலறையுமென்று கூப்பிட்டார்கள்.

81. பொந்தியுப் பிலாத்து அவரை ஆரண்டைக்கு அனுப்பினான்.
வி. இராசாவாகிய எரோதேயண்டைக்கு.

82. எரோதே இராசாவண்டையில் அவர்கள் இயேசு சுவாமியை என்ன செய்தார்கள்.
வி. அவரைப் பரிகாசம் பண்ணினார்கள்.

83. பின்பு பொந்தியுப் பிலாத்து யூதரை அமர்த்தும்படிக்கு என்ன அநியாயஞ் செய்தான்.
வி. அவரை வாரினால் அடிப்பித்தான்.

84. பிலாத்துவின் சேவகரும் அவருக்கு நிந்தையாக என்ன செய்தார்கள்.
வி. அவர் சிரசின் மேல் ஒரு முள்முடியைச் சூட்டி, அவர் முகத்திலே துப்பி, அவரை அடித்தார்கள்.

85. கடைசியிலே இயேசுநாதர் எந்த ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்பட்டார்.
வி. சிலுவையில் அறையப்படும் ஆக்கினைக்குள்ளாகத் தானே.

---

86. இயேசு சுவாமியைச் சிலுவையில் அறையும்படிக்கு எங்கே அவரை அழைத்துக்கொண்டு போனார்கள்.
வி. எருசலேமுக்கு வெளியே கொல்கத்தா என்னப்பட்ட ஸ்தலத்துக்கு.

87. எவர்கள் நடுவிலே அவர் சிலுவையில் அறையுண்டார்.
வி. இரண்டு குற்றவாளிகள் நடுவிலே.

88. கிறிஸ்து சிலுவையில் தொங்கும்போது எத்தனை வார்த்தைகளைச் சொன்னார்.

வி. ஏழு.

89. அவர் மரித்தபோது என்ன சம்பவித்தது.
வி. பெரிய அற்புதங்கள்.

90. அவர் மரித்த பின்பு நடந்ததென்ன.
வி. சேவகரில் ஒருவன் அவர் விலாவை ஈட்டியினாலே குத்தினான்.

91. அப்போது கிறிஸ்துவின் பரிசுத்த விலாவிலிருந்து என்ன புறப்பட்டது.
வி. இரத்தமுந் தண்ணீரும்.

92. அவருடைய சரீரத்தைச் சிலுவையிலிருந்திறக்கினவன் ஆர்.
வி. அரிமத்தியா ஊரானாகிய யோசேப்பு.

93. அவன் இயேசுவின் சரீரத்தை எங்கே வைத்தான்.
வி. தன் தோட்டத்திலிருந்த புதுக் கல்லறையிலே.

94. கிறிஸ்து சிலுவையில் அறையுண்டு மரித்தடக்கப்பட்டது எந்தக் கிழமை.
வி. வெள்ளிக்கிழமை.

95. அவர் எந்தக் கிழமையில் உயிரோடெழுந்தார்.
வி. நாயிற்றுக்கிழமை அதிகாலமே.

96. அப்போது சம்பவித்ததென்ன.
வி. பூமி அதிர்ந்தது, அவர் உயிரோடெழுந்தபோது ஒரு தூதன் வானத்திலிருந்திறங்கி, கல்லறையின் வாசல் மேல் இருந்த கல்லைப் புரட்டிப்போட்டான்.

97. இயேசு சுவாமி எழுந்த பின்பு ஆராருக்குத் தரிசனையானார்.
வி. கல்லறையில் அவரைத் தேடின இஸ்திரிகளுக்கும், அதின் பின்பு தம்முடைய சீஷருக்கும், விசுவாசிகளான வேறே அநேகருக்குந் தரிசனையானார்.

98. உயிர்த்தெழுந்த கிறிஸ்து எத்தனை நாள் தம்முடையவர்களோடு சஞ்சரித்தார்.
வி. நாற்பது நாள்.

99. அப்போது தமது சீஷர்களுக்கு என்ன கட்டளையைக் கொடுத்தார்.
வி. நீங்கள் லோகமெங்கும் போய், சிருஷ்டியாயிருக்கிற யாவருக்குஞ் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்களென்று அவர்களுக்குக் கற்பித்தார்.

100. அத்தோடு என்ன வாக்குத்தத்தம் பண்ணினார்.
   வி. விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவானென்று வாக்குத்தத்தம்பண்ணினார்.
101. விசுவாசியாதவர்களைப் பற்றி என்ன சொன்னார்.
   வி. அவர்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவார்களென்றார்.
102. நாற்பதாம் நாளிலே எங்கே ஏறினார்.
   வி. பரமண்டலத்துக்கேறிப் பராபரனுடைய வலதுபாரிசத்தில் வீற்றிருக்கிறார்.
103. அவர் இங்கேயும் இல்லையா.
   வி. இருக்கிறார்; ஏனென்றால் மெய்யான தேவனும் மெய்யான மனுஷனுமாகிய இயேசு கிறிஸ்து எங்கும் நிறைந்தவராயிருக்கிறார்.
104. அதைக் குறித்துத் தம்முடைய சீஷர்களுக்கு என்ன சொன்னார்.
   வி. இதோ, நான் லோகமுடிவுமட்டாகச் சகலநாட்களிலும் உங்களுடனே கூட இருக்கிறேனென்றார்.
105. அவர் பரமண்டலங்களுக்கு ஏறினபின்பு, பத்தாம் நாளிலே எந்த வரத்தை ஊற்றினார்.
   வி. பரிசுத்த ஆவியாகிய வரத்தை ஊற்றினார்.

---

106. கிறிஸ்து பாடுபட்டு மரித்ததினாலே ஆரை மீட்டார்.
   வி. எல்லா மனுஷரையும்.
107. எல்லாரும் இரட்சிக்கப்பட வேண்டும் என்கிற சித்தமும் அவருக்குண்டா.
   வி. உண்டு.
108. எதினாலே இரட்சிப்புக்குப் பங்காளிகளாவோம்.
   வி. உலக இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே.
109. ஆதலால் இரட்சிக்கப்பட மனதாயிருக்கிறவர்கள் செய்யவேண்டியதென்ன.
   வி. அவர்கள் மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்க வேண்டும்.
110. நாம் சுய புத்தியினாலும் பலத்தினாலும் இயேசுகிறிஸ்துவை அண்டிக்கொண்டு அவரை விசுவாசிக்கக் கூடுமா.

வி. கூடாது.

**111.** நமக்குள் மெய்யான விசுவாசத்தை உண்டுபண்ணுகிறவர் ஆர்.
வி. பரிசுத்த ஆவி.

**112.** பரிசுத்த ஆவி நமக்குள் நடப்பிக்கிற கிரியை என்ன.
வி. பரிசுத்தமாக்குதலின் கிரியைதானே.

**113.** அதை எந்த விதமாய் நடப்பிக்கிறார்.
வி. அவர் நம்மைச் சுவிசேஷத்தைக்கொண்டு வரவழைத்து, தம்முடைய வரங்களினால் நம்மைப் பிரகாசிப்பித்து, மெய்யான விசுவாசத்தினால் நம்மைப் பரிசுத்தமாக்கி, காப்பாற்றி வருகிறார்.

**114.** எதினாலே அதை நடப்பிக்கிறார்.
வி. கிருபையின் எத்தனங்களினால்.

**115.** கிருபையின் எத்தனங்கள் என்ன.
வி. பராபரனுடைய வசனமும், ஞானதிரவியங்களாகிய ஞானஸ்நானமும் நற்கருணையுந்தானே.

---

**116.** பராபரனுடைய வசனம் என்னமாயிருக்கிறது.
வி. சீவனும் ஆவியுமாயிருக்கிறது.

**117.** ஞானஸ்நானம் என்ன.
வி. மறுசெனன முழுக்காயிருக்கிறது.

**118.** ஆருடைய நாமத்தினால் ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுகிறோம்.
வி. பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்தினால்.

**119.** அதினால் ஆருடைய பிள்ளைகளாவோம்.
வி. திரியேக பராபரனுடைய பிள்ளைகளாவோம்.

**120.** விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றவன் எதற்கு நீங்கலாகிறான்.
வி. தேவ கோபத்திற்கும் பிசாசின் வல்லமைக்கும் மரணத்திற்கும் நரகத்திற்கும் நீங்கலாகிறான்.

**121.** அவன் இலவசமாய் அடைகிறதென்ன.
வி. பாவமன்னிப்பையுங் கிறிஸ்துவின் நீதியையும் அடைகிறான்.

**122.** பராபரன் அவனைக் கிறிஸ்துவின் நிமித்தம் எப்படிப்பட்டவனாக ஏற்றுக்கொள்ளுகிறார்.
வி. தம்முடைய பிள்ளையாக.

123. இதுவுமன்றி அவன் எதினால் அபிஷேகம் பண்ணப்படு கிறான்.
வி. பரிசுத்த ஆவியினாலே.

124. அப்போது அவன் எப்படிப்பட்டவனாயிருக்கிறான்.
வி. நித்திய சீவனின் சுதந்தரவாளியாயிருக்கிறான்.

125. ஆரைத் தரித்துக்கொள்ளுகிறான்.
வி. இயேசு கிறிஸ்துவை.

126. அவன் மரண பரியந்தம் உண்மையாயிருந்தால், என் னத்தை அடைவான்.
வி. மோட்சத்தை.

127. மெய்யான விசுவாசத்திலே நிலைநின்று, அதிலே அதிக மதிகமாக வளரும்படி அவன் செய்ய வேண்டிய தென்ன.
வி. பராபரனுடைய வசனத்தைக் கேட்டுத் தியானித் துத் தன் இருதயத்திலே காத்து, ஆத்துமபசிதாகத் தோடே அடிக்கடி ஞானதிரவியமாகிய நற்கருணை யை வாங்க வேண்டும்.

---

128. நற்கருணையை ஏற்படுத்தினவர் ஆர்.
வி. இயேசு கிறிஸ்துநாதர்.

129. எப்போது அதை ஏற்படுத்தினார்.
வி. தாம் காட்டிக்கொடுக்கப்பட்ட அன்றிராத்திரியிலே.

130. இயேசு சுவாமி பரிசுத்த இராப்போசனத்திலே அப்பத் தோடுந் தீவிதிராட்சப் பழ இரசத்தோடுங்கூட என் னென்னத்தைக் கொடுக்கிறார்.
வி. தம்முடைய திருச்சரீரத்தையும் திரு இரத்தத்தை யும் கொடுக்கிறார்.

131. பரிசுத்த இராப்போசனத்தினால் வரும் பிரயோசனங் கள் என்ன.
வி. பாவமன்னிப்புஞ் சீவனும் மோட்சமும் உயிர்த்தெ ழுதலின் திடநம்பிக்கையுந்தானே.

132. இந்தப் பிரயோசனங்களைப் பெற்றுக்கொள்ளுகிறவர் கள் ஆர்.
வி. மெய் விசுவாசிகள்.

---

133. பராபரனுடைய பிள்ளைகளாகிய நாம் இந்த உலகத்திலே எப்படி நடக்க வேண்டும்.
   வி. தேவ புத்திரருக்கேற்றதாக நம்முடைய பரம பிதாவின் மகிமைக்கென்று பரிசுத்தமாய் நடக்க வேண்டும்.
134. அதை நாம் எப்படி செய்ய வேண்டும்.
   வி. நாம் எல்லாவற்றையும் பார்க்கப் பராபரனுக்குப் பயந்து, அவரைச் சிநேகித்து, அவர்பேரில் நம்பிக்கையாயிருக்க வேண்டும்.
135. எப்போதும் நம்முடைய கண்ணுக்கு முன்பாக இருக்க வேண்டியதென்ன.
   வி. பராபரனுடைய கற்பனைகள்.
136. அதுகளின்படி நாம் செய்ய வேண்டியதென்ன.
   வி. பராபரனையும் எல்லா மனுஷரையுஞ் சிநேகிக்க வேண்டும்.
137. நாம் பராபரனை எப்படி சிநேகிக்க வேண்டும்.
   வி. முழு இருதயத்தினாலும் முழு ஆத்துமாவினாலும்.
138. நமக்கடுத்தவனை எப்படி சிநேகிக்க வேண்டும்.
   வி. நம்மைப் போலவே.
139. நாம் எப்போதும் ஆருடைய மாதிரியைப் பின்பற்ற வேண்டும்.
   வி. நம்முடைய இரட்சகரின் மாதிரியை.
140. பரிசுத்தமாய் நடக்கிறதற்கான பெலனை அடையும்படிக்கு நாம் எப்போதும் ஆரை அண்டிக்கொண்டிருக்க வேண்டும்.
   வி. இயேசு கிறிஸ்துவை.
141. நாம் எந்த வழியில் அவரைப் பின்செல்ல வேண்டும்.
   வி. நித்திய சீவனுக்குக் கொண்டுபோகிற நெருக்கமான வழியிலே.

---

142. சகல உபத்திரவங்களையும் நாம் எப்படி ஏற்றுக்கொண்டு சகிக்கவேண்டும்.
   வி. வணக்கத்தோடும் பொறுமையோடும்.
143. உபத்திரவம் என்னமாயிருக்கிறது.
   வி. பிரயோசனமாயிருக்கிறது.

144. அது எவ்விதமாய் மாறிப்போகும்.
   வி. ஆசீர்வாதமும் சந்தோஷமுமாய் மாறிப்போகும்.
145. பராபரனால் உண்டாகும் உபகாரங்களெல்லாம் நம்மைத் தினம் எதற்கு எழுப்ப வேண்டும்.
   வி. அவரைத் துதிக்கிறதற்கும் முழு மனதினாலே நம்புகிறதற்குந்தானே.
146. எதற்கு நாம் எச்சரிக்கையாயிருக்க வேண்டும்.
   வி. பிசாசுக்கும் லோகத்திற்கும் நம்முடைய சுய பொல்லாத மாமிசத்திற்கும் எச்சரிக்கையாயிருக்க வேண்டும்.
147. ஆதலால் நாம் எப்போதுஞ் செய்ய வேண்டியதென்ன.
   வி. பராபரனுடைய வசனமென்கிற வெளிச்சத்தைப் பார்த்து நடக்கவும், விழித்திருந்து செபம் பண்ணவும் வேண்டும்.
148. நாம் எப்படி செபம் பண்ணவேண்டும்.
   வி. மனத்தாழ்மையோடுந் திடநம்பிக்கையோடும்.
149. ஆருக்காக நாம் செபம் பண்ணவேண்டும்.
   வி. நமக்காகவும் மற்ற எல்லா மனிதருக்காகவும்.

---

150. நாம் தினந்தோறும் என்னத்தை நினைக்க வேண்டும்.
   வி. நம்முடைய மரணத்தையும் நியாயத்தீர்ப்பின் நாளையும்.
151. நாம் மரணபரியந்தம் உண்மையாயிருந்தால், எப்படி மரிப்போம்.
   வி. பாக்கியமாய் மரிப்போம்.
152. நம்முடைய சரீரமரணம் நமக்கு மெய்யான மரணமாயிருக்குமா.
   வி. இராது; ஏனென்றால் நம்முடைய சீவனாயிருக்கிற இயேசு சுவாமி நம்மை மரணத்துக்கு நீங்கலாக்கி மீட்டார்.
153. ஆதலால் நம்முடைய மரணம் நமக்கு என்னமாயிருக்கும்.
   வி. நித்திரையும் சகல வருத்தத்தின் முடிவுமாயிருக்கும்.
154. நம்முடைய ஆத்துமா சரீரத்தை விட்டுப் பிரிந்து, தெய்வதூதரால் எங்கே கொண்டுபோகப்படும்.
   வி. கிறிஸ்துவினிடத்திற்கு.

155. புதைக்கப்பட்டு மண்ணாய்ப்போகிற நமது சரீரம் என்றென்றைக்கும் பிரேதக் குழியில்தானே இருக்குமா.
வி. இராது.

156. ஆர் நம்மை உயிரோடே எழுப்புவார்.
வி. இயேசுநாதர்.

157. எப்போது.
வி. அவர் உயிரோடிருக்கிறவர்களையும் மரித்தவர்களையும் நியாயந்தீர்க்கிறதற்குத் தாம் மகிமையாய் வருங் கடைசி நாளிலே.

158. அப்போது நீதிமான்கள் எப்படி எழுந்திருப்பார்கள்.
வி. மகிமையோடும் மகிழ்ச்சியோடும் எழுந்திருப்பார்கள்.

159. அவர்கள் எங்கே நிறுத்தப்படுவார்கள்.
வி. இயேசு கிறிஸ்துவினுடைய வலது பாரிசத்திலே.

160. பொல்லாதவர்கள் எங்கே நிறுத்தப்படுவார்கள்.
வி. அவருடைய இடது பாரிசத்திலே.

161. அப்போது இயேசு சுவாமி நீதிமான்களுக்கு எந்த வார்த்தைகளைச் சொல்லுவார்.
வி. வாருங்கள், என் பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே என்கிற மகா பட்சமுள்ள வார்த்தைகளைச் சொல்லியழைப்பார்.

162. பொல்லாதவர்களுக்கு என்ன சொல்லுவார்.
வி. சபிக்கப்பட்டவர்களே, என்னை விட்டு அகன்று போங்களென்பார்.

163. அப்போது இவர்கள் எங்கே போவார்கள்.
வி. நித்திய வேதனையிலே.

164. நீதிமான்கள் கிறிஸ்துவோடே கூட எங்கே போவார்கள்.
வி. நித்திய ஜீவனிலே.

165. அப்போது ஆரைத் தரிசிப்பார்கள்.
வி. திரியேக பராபரனைத் தரிசிப்பார்கள்.

166. எதை அடைந்து அனுபவிப்பார்கள்.
வி. நித்திய சந்தோஷத்தை அடைந்து அனுபவிப்பார்கள்.

# ஐந்தாம் பங்கு.

## சங்கீதங்களும், செபங்களும்.

---

### 1. சங்கீதம்.

ஆகாதவர்களுடைய ஆலோசனையில் நடவாமலும், பாவிகளுடைய வழியில் நில்லாமலும் சரசக்காரர் உட்கார்ந்திருக்கிற இடத்தில் உட்காராமலும்,

2. கர்த்தருடைய வேதத்தின்மேல் பிரியமாயிருந்து, அவருடைய வேதத்தில் இரவும் பகலுந் தியானிப்பாயிருக்கிற மனுஷன் பாக்கியவான்.

3. அவன் நீர் வாய்க்கால்களின் ஓரமாய் நடப்பட்டு, தன் காலத்திலே தன் கனியைத் தந்து, இலை உதிராதிருக்கிற மரத்தைப்போல் இருப்பான்; அவன் செய்வதெல்லாம் வாய்க்கும்.

4. ஆகாதவர்கள் அப்படியிராமல், காற்று பறக்கடிக்கும் பதரைப்போல் இருக்கிறார்கள்.

5. ஆகையால் ஆகாதவர்கள் நியாயத்தீர்ப்பிலும், பாவிகள் நீதிமான்களின் சபையிலும் நிலை நிற்பதில்லை.

6. ஏனென்றால் கர்த்தர் நீதிமான்களின் வழியை அறிந்திருக்கிறார்; ஆகாதவர்களின் வழியோ அழியும்.

### 23. சங்கீதம்.

கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார், நான் தாழ்ச்சி அடையேன்.

2. அவர் என்னைப் புல்லுள்ள ஸ்தலங்களில் மேய்த்து, என்னை அமர்ந்த தண்ணீர்களண்டைக்குக் கொண்டுபோய் விடுகிறார்.

3. அவர் என் ஆத்துமத்தைக் குளிரப்பண்ணி, என்னைத் தம்முடைய நாமத்தின் நிமித்தமாக நீதியின் பாதைகளில் நடத்துகிறார்.

4. நான் மரண நிழலின் பள்ளத்தாக்கிலே நடந்தாலும், பொல்லாப்புக்குப் பயப்படேன்; ஏனெனில் தேவரீர் என்னோ

டேகூட இருக்கிறீர், உம்முடைய கோலும் உம்முடைய தடியும் என்னைத் தேற்றுகிறது.

5. என் சத்துருக்களுக்கு எதிரே நீர் எனக்கு முன்பாக ஒரு பந்தியை ஆயத்தப்படுத்தி, என் தலையை எண்ணெயால் அபிஷேகம் பண்ணுகிறீர்; என் பாத்திரம் நிரம்பி இருக்கிறது.

6. என் சீவனுள்ள நாளெல்லாம் நன்மையுங் கிருபையும் என்னைத் தொடரும்; நான் கர்த்தருடைய வீட்டிலே நீடித்த நாட்களாய் நிலைத்திருப்பேன்.

## 91. சங்கீதம்.

உன்னதமானவரின் மறைவில் இருக்கிறவன் சருவ வல்லவருடைய நிழலிலே இராத்தங்குவான்.

2. கர்த்தரை என் அடைக்கலமும் என் கோட்டையும், நான் நம்பியிருக்கிற என் பராபரனும் என்கிறேன்.

3. ஏனெனில் அவர் உன்னைக் குருவி பிடிக்கிறவனுடைய கண்ணிக்கும் விக்கினமான பெருவாரிக் காய்ச்சலுக்குந் தப்புவிப்பார்.

4. தமது சிறகுகளாலே உன்னை மூடுவார்; அவர் செட்டைகளின் கீழே திடன்கொண்டு தங்குவாய்; அவருடைய உண்மை பரிசையுங் கேடயமுமாம்.

5. இராவின் அருக்களிப்புக்கும், பகலில் பறக்கும் அம்புக்கும்,

6. இருளில் நடமாடும் பெருவாரிக் காய்ச்சலுக்கும், மத்தியானத்தில் பாழ்க்கடிக்கும் சங்காரத்துக்கும் பயப்படாதிருப்பாய்.

7. உன் பக்கத்தில் ஆயிரம் பேரும் உன் வலது புறத்தில் பதினாயிரம் பேரும் விழுந்தாலும், அது உன்னண்டைக்குச் சேராது.

8. உன் கண்களால் மாத்திரம் அதைப்பார்த்து, ஆகாதவர்களுக்கு வருஞ் சரிக்கட்டுதலைக் காண்பாய்.

9. ஏனெனில், கர்த்தாவே, தேவரீர் என் அடைக்கலமாயிருக்கிறீர்; உன்னதமானவரை உனக்குத் தாபரமாக வைத்தாய்.

10. பொல்லாப்பு உனக்கு வராமலும், வாதை உன் கூடாரத்தை அணுகாமலும் இருக்கும்.

11. ஏனெனில் உன் வழிகளில் எல்லாம் உன்னைக் காக்கும்படிக்கு உனக்காகத் தம்முடைய தூதர்களுக்குக் கற்பிப்பார்.

12. உன் பாதம் கல்லில் இடறுதபடிக்கு கைகளில் உன்னை ஏந்திக் கொண்டு போவார்கள்.

13. சிங்கத்தின் மீதிலும் விரியன் பாம்பின் மீதிலும் நடந்து, சிங்கக் குட்டியையும் வலுசர்ப்பத்தையும் மிதித்துப் போடுவாய்.

14. நம்முடையமேல் அவன் வாஞ்சையாய் இருக்கிறபடியினாலே, அவனை விடுவிப்போம்; நமது நாமத்தை அவன் அறிந்திருக்கிறபடியினாலே, அவனை உயர்ந்த அடைக்கலத்திலே வைப்போம்.

15. நம்மை நோக்கிக் கூப்பிடுவான், நாம் அவனுக்கு மறுஉத்தரவு அருளிச் செய்வோம்; நெருக்கத்தில் நாம் அவனோடிருந்து, அவனைத் தப்புவித்து, அவனை மகிமைப்படுத்துவோம்.

16. நீடித்த நாட்களால் அவனைத் திருப்தியாக்கி, நமது இரட்சிப்பை அவனுக்குக் காண்பிப்போம்.

## 100. சங்கீதம்.

பூமியின் குடிகளே, எல்லாருங் கர்த்தரை ஆர்ப்பரியுங்கள்.

2. கர்த்தருக்கு மகிழ்ச்சியோடே ஆராதனை செய்து, கம்பீர சத்தத்தோடே அவர் முன்பாக வாருங்கள்.

3. கர்த்தரே பராபரனென்று அறியுங்கள்; நாம் அல்ல, அவரே நம்மைத் தமக்குச் சனமுந் தமது மேய்ச்சலின் ஆடுகளுமாக்கினார்.

4. அவர் வாசல்களில் துதியோடும் அவர் பிரகாரங்களில் புகழ்ச்சியோடும் பிரவேசித்து, அவரைத் துதித்து, அவருடைய நாமத்தை ஸ்தோத்திரியுங்கள்.

5. ஏனெனில் கர்த்தர் நல்லவர்; அவருடைய கிருபை என்றென்றைக்கும் அவருடைய உண்மை தலைமுறை தலைமுறையாகவும் உள்ளது.

## 103. சங்கீதம்.

என் ஆத்துமமே, கர்த்தரையும் என் முழு உள்ளமே, அவருடைய பரிசுத்த நாமத்தையும் ஸ்தோத்திரி.

2. என் ஆத்துமமே, கர்த்தரை ஸ்தோத்திரி; அவர் செய்த சகல உபகாரங்களையும் மறவாதே.

3. அவர் உன் அக்கிரமங்களை எல்லாம் மன்னித்து, உன் நோக்காட்டை எல்லாங் குணமாக்கி,

4. உன் பிராணனை அழிவுக்கு விலக்கி, மீட்டு, உன்னைக் கிருபையாலும் இரக்கங்களாலும் முடி சூட்டி,

5. உன் வாயை நன்மையால் திருப்தியாக்குகிறதினாலே, கழுகுக்குச் சமானமாய் உன் வயது திரும்ப வாலவயதுபோல் ஆகிறது.

6. ஒடுக்கப்பட்ட யாவருக்குங் கர்த்தர் நீதியும் நியாயமுஞ் செய்கிறார்.

7. அவர் தமது வழிகளை மோசேக்கும், தமது கிரியைகளை இஸ்ரவேல் புத்திரருக்குந் தெரியப்பண்ணினார்.

8. கர்த்தர் மன உருக்கமும் நீண்டசாந்தமும் மிகுந்த கிருபையும் உள்ளவர்.

9. நித்தியகாலமாக வழக்காடார், என்றென்றைக்குங் கோபம் வைக்கார்.

10. அவர் நம்முடைய பாவங்களுக்குத் தக்கதாக நமக்குச் செய்யாமலும், நம்முடைய அக்கிரமங்களுக்குத் தக்கதாக நமக்குச் சரிக்கட்டாமலும் இருக்கிறார்.

11. ஏனெனில் பூமியின் மேல் வானம் இருக்கும் உயரம் போல் அவருடைய கிருபை அவருக்குப் பயந்தவர்கள் மேல் வல்லபமாய் இருக்கிறது.

12. மேற்குக்குங் கிழக்குக்கும் இருக்குந்தூரமாக நம்முடைய மீறுதல்களை நம்மை விட்டு விலக்குகிறார்.

13. தகப்பன் பிள்ளைகளுக்கு இரங்குகிறது போலே கர்த்தர் தமக்குப் பயந்தவர்களுக்கு இரங்குகிறார்.

14. ஏனென்றால் நாம் என்ன உருவென்று அவர் அறிவார், நாம் மண்ணென்று நினைவுகூருகிறார்.

15. மனுஷன் தன் நாட்களில் புல்லுக்கு ஒப்பாய் இருக்கிறான், வெளியின் புஷ்பத்தைப்போல் பூக்கிறான்.

16. ஏனெனில் காற்று அதன்மேல் வீசிக் கடந்தவுடனே அது போயிற்று; அதன் ஸ்தலம் அப்புறம் அதை அறிந்திராது.

17. ஆனால் கர்த்தருடையகிருபை அவருக்குப் பயந்தவர்கள் மேலும், அவருடைய நீதி அவர்கள் பிள்ளைகளுடைய பிள்ளைகள்மேலும் அநாதியாய் என்றென்றைக்கும் உள்ளது.

18. அவருடைய உடன்படிக்கையைக் கைக்கொண்டு, அவருடைய கட்டளைகளை அவைகளின்படி செய்யும்படியாக நினைக்கிறவர்களின் மேலேதானே.

19. கர்த்தர் வானங்களில் தம்முடைய ஆசனத்தை உறுதிப்படுத்தினார்; அவருடைய இராசரீகஞ் சகலத்தையும் ஆளுகிறது.

20. கர்த்தருடைய சொற்படி கேட்டு, அவருடைய வசனத்தின்படி செய்கிற பலத்த சௌரியவான்களாகிய அவருடைய தூதர்களே, அவரை ஸ்தோத்திரியுங்கள்.

21. கர்த்தருக்குப் பிரியமானதைச் செய்து, அவர் வேலையாட்களாயிருக்கிற அவருடைய எல்லாச் சேனைகளே, அவரை ஸ்தோத்திரியுங்கள்.

22. கர்த்தர் ஆளுகிற எவ்விடங்களிலுமுள்ள அவருடைய எல்லாக் கிரியைகளே, அவரை ஸ்தோத்திரியுங்கள்; என் ஆத்துமமே, கர்த்தரை ஸ்தோத்திரி.

## 121. சங்கீதம்.

எனக்கு ஒத்தாசை வரும் பருவதங்களுக்கு நேராக என் கண்களை ஏறெடுக்கிறேன்.

2. வானத்தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தரிடத்திலிருந்து எனக்கு ஒத்தாசை வரும்.

3. உன் காலைத் தள்ளாட ஒட்டார்; உன்னைக் காக்கிறவர் உறங்கார்.

4. இதோ இஸ்ரவேலைக் காக்கிறவர் உறங்குகிறதும் இல்லை, தூங்குகிறதும் இல்லை.

5. கர்த்தர் உன்னைக் காக்கிறவர்; கர்த்தர் உன் வலது பக்கத்திலே உனக்கு நிழலாக இருக்கிறார்.

6. பகலில் வெய்யிலாகிலும் இரவில் நிலவென்கிலும் உன்னைச் சேதப்படுத்துவதும் இல்லை.

7. கர்த்தர் உன்னை எல்லாத் தீங்குக்கும் விலக்கமாய்க் காப்பார், அவர் உன் ஆத்துமத்தைக் காப்பார்.

8. கர்த்தர் உன் போக்கையும் உன் வரத்தையும் இதுமுதற்கொண்டு என்றைக்கும் காப்பார்.

## காலைச்செபம்.

### 1.

பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமம் என்னை ஆசீர்வதித்துக் காக்கக் கடவது. ஆமென்.

பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த சருவத்திற்கும் வல்ல பிதாவாகிய பராபரனை விசுவாசிக்கிறேன். மு.

என் பரம பிதாவே, தேவரீர் என்னைப்போன இரவிலே சேதமும் விக்கினமுமில்லாமல் காப்பாற்றின கிருபைக்காக, உமது நேசகுமாரனும் என் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே, உமக்கு ஸ்தோத்திரஞ் செலுத்துகிறேன். தேவரீர் இந்தப் பகல் முழுவதுஞ் சகல பாவங்களுக்கும் பொல்லாங்குகளுக்கும் என்னைக்காத்து, என் நினைவு பேச்சு நடத்தைகளெல்லாம் உமக்கு ஏற்றிருக்கவும், எனக்கடுத்த ஊழியத்தை நான் உண்மையுஞ் சுறுசுறுப்புமாய்ச் செய்து முடிக்கவும், கிருபை செய்தருளும். என் ஆத்துமஞ் சரீரம் மற்றுமுண்டானதுகளையுங் கிறிஸ்தமான சபையையும் அது விர்த்திக்குங் கிரியைகளையுந் தேவரீருக்குக் கையளிக்கிறேன். பொல்லாங்கனாகிய சத்துரு என்பேரில் செயங்கொள்ளாதபடிக்கு, உமது பரிசுத்த தூதரை எனக்குக் கட்டளையிட்டு, உமது ஆவியைக்கொண்டு என்னை நித்திய சீவனின் பாதையிலே நடத்தியருளும், சுவாமி. ஆமென்.

பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே. மு.

### 2.

கர்த்தராகிய பராபரனே, தேவரீர் என் தயவுள்ள பிதாவாயிருக்கிறீர். போன இராத்திரியிலே தேவரீர் எனக்குப் பாராட்டின இரக்கத்திற்காக உமக்கு ஸ்தோத்திரஞ்செலுத்த அதிகாலையில் உமக்கு முன்பாக வருகிறேன். காலமே உமது கிருபையை என்னைக் கேட்கப்பண்ணும். நான் உம்மை நம்பியிருக்கிறேன். கர்த்தாவே, நான் நடக்கவேண்டிய உம்முடைய வழிகளை எனக்குத் தெரிவியும்; உம்முடைய பாதை

களை எனக்குப் போதிவியும். என்னை உம்முடைய சத்தியத்திலே வழி நடத்தியருளும். தேவரீர் என் இரட்சிப்பின் பராபரன். இன்றைக்கு என்னை நீர் எல்லாப் பாவங்களுக்கும் பொல்லாங்குகளுக்கும் விலக்கமாகத் தற்காத்து, உமக்குப் பிரியமானதைச் செய்ய எனக்குப் படிப்பியும். உம்முடைய நல்லாவி என்னைச் செம்மையான வழியிலே நடத்துவாராக. என் இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவின் நிமித்தம் என் செபத்தைக் கேட்டுக் கட்டளையிட்டருளும், சுவாமி. ஆமேன்.

---

## மாலைச் செபம்.

### 1.

பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமம் என்னை ஆசீர்வதித்துக் காக்கக்கடவது. ஆமேன்.

பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த சருவத்திற்கும் வல்ல பிதாவாகிய பராபரனை விசுவாசிக்கிறேன். மு.

என் பரம பிதாவே, தேவரீர் என்னை இன்று முழுவதுஞ் சேதமும் விக்கினமுமில்லாமல் காப்பாற்றின கிருபைக்காக, உமது நேச குமாரனும் என் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே உமக்கு ஸ்தோத்திரஞ் செலுத்துகிறேன், தேவரீர் என் பாவங்களை யெல்லாம் இயேசு கிறிஸ்துவின் நிமித்தம் மன்னியும். என் ஆத்துமஞ் சரீரம் மற்றுமுண்டானதுகளையுங் கிறிஸ்தமான சபையையும் அது விர்த்திக்குங் கிரியைகளையுந் தேவரீருக்குக் கையளிக்கிறேன். இந்த இராவிலே சாத்தான் முதலான சத்துருக்கள் என்னை மோசப்படுத்தாதபடிக்கு, உமது பரிசுத்த தூதரை எனக்குக் காவலாக வைத்து, நல்ல நித்திரையைத் தந்து, உமக்கு ஸ்தோத்திரமுண்டாகக் காலமே என்னைச் சுகத்தோடே எழுப்பியருளும், சுவாமி. ஆமேன்.

பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே. மு.

### 2.

அன்புள்ள பரம தகப்பனே, தேவரீர் என்னைப் பகல் முழுவதும் சகல பொல்லாங்குகளுக்கும் விலக்கமாய்த் தற்

காத்திரட்சித்து, என்னைக் கிருபையாய் ஆசீர்வதித்ததற்காக உமக்கு நான் ஸ்தோத்திரஞ் செலுத்துகிறேன். நான் இன்று செய்த எல்லாப் பாவங்களையும் இயேசு கிறிஸ்துவின் நிமித்தம் மன்னித்தருளும். தேவரீர் என்னை இந்த இராத்திரியில் சகல மோசங்களுக்கும் விக்கினங்களுக்கும் மறைத்து, எனக்கு நல்ல நித்திரையைத் தந்து, நான் காலமே திரும்பச் சுகத்தோடு எழுந்திருக்கும்படி கிருபை செய்தருளும். என்னை மீட்டுக் கொண்ட சத்திய பராபரனாகிய கர்த்தாவே, உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன். என் இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவின் நிமித்தம் என்செபத்தை ஏற்றுக்கொள்ளும், சுவாமி. ஆமேன்.

---

## தின செபம்.

கிருபையுள்ள கர்த்தராகிய பராபரனே, சுத்த இருதயத்தை எனக்குச் சிருஷ்டியும், நிலைவரமான ஆவியை என் உள்ளத்தில் புதிதாய் உண்டாக்கும். உம்முடைய முகத்தை விட்டு என்னைத் தள்ளாமலும், உமது பரிசுத்த ஆவியை என்னிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளாமலும் இரும். உம்முடைய இரட்சிப்பின் சந்தோஷத்தை எனக்குக் கட்டளையிட்டருளும். உற்சாகமான ஆவி என்னைத் தாங்கட்டும். பராபரனே, என்னை ஆராய்ந்து என் இருதயத்தை அறிந்து கொள்ளும்; நீர் என்னைச் சோதித்து, என் சிந்தனைகளை அறிந்துகொண்டு, என்னில் வேதனை உண்டாக்கும் வழி உண்டோ என்று பார்த்து, என்னை நித்திய வழியிலே நடத்தும். என் அருமை இரட்சகரின் நிமித்தம் என் செபத்தைக் கேட்டருளும். சுவாமி. ஆமேன்.

---

## பாவமன்னிப்புக்காகச் சொல்லுஞ் செபம்.

இரக்கமுள்ள பராபரனே, ஏழைப்பாவியாகிய நான் உமக்கு முன்பாக விழுந்து, உம்முடைய கிருபையையும் பொறுமையையுந் தேட வருகிறேன். நான் மனதினாலும் வாக்கினாலும் நடக்கையினாலும் வெகு விதமான பாவக்குற்றங்க

ளைப் பண்ணினேன் என்று மனஸ்தாபப்பட்டு அறிக்கையிடுகி றேன். ஆ, தயவுள்ள சுவாமி, நியாயமாயிருக்கிறபடி என்னை நரகத்திலே தள்ளாதேயும், தேவரீர் என் இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவின் பாடுகளையும் மரணத்தையும் பார்த்து, நான் செய்த பாவங்களை எல்லாம் மன்னித்து, என்னை இரட்சியும். நான் திரும்பப்பாவத்திற்குச் சோதிக்கப்பட்டால், அதற்குச் சம்மதியாமல், அதை அருவருக்கவும், உமக்குப் பிரியமானபிள்ளையாய் நடக்கவும், பரிசுத்த ஆவியைக்கொண்டு எனக்குப் புத்தியையும் பலத்தையுந் தந்தருளும். இனி நான் சாகும் வேளையிலே உம்முடைய மோட்ச இராச்சியத்தில் சேருவதற்கு, என்னை ஆயத்தம் பண்ணியருளும், சுவாமி. ஆமென்.

---

## தாய் தகப்பன்மாருக்காகச் செய்யும் சேபம்.

அன்புள்ள பரமபிதாவே, தேவரீர் உமது பிள்ளையாகிய எனக்கு அருமையான தாய் தகப்பன்மாரைக் கிருபையாய்க் கட்டளையிட்டதற்காக உமக்கு ஸ்தோத்திரஞ் செலுத்துகிறேன். அவர்களுக்கு யாதொரு சேதமும் நேரிடாதபடிக்கு, தேவரீர் அவர்களைக் காப்பாற்றி, அவர்களுக்கு நல்ல சுகத்தையும் நீடிய ஆயுசையுந் தந்து, அவர்களுடைய ஆத்துமாவுக்கும் சரீரத்துக்கும் வேண்டிய சகல ஆசீர்வாதங்களையும் பரிபூரணமாய்க் கட்டளையிட்டருளும். நான் அவர்களை அசட்டை பண்ணாமலும், அவர்களுக்குக் கோபம் வருவிக்காமலும் அவர்களைக் கனமாக எண்ணிக்கொண்டு, அவர்களுக்கு ஊழியஞ் செய்து, கீழ்ப்படிந்து, பட்சத்தையுஞ் சங்கையையுங் காட்டி வருவதினால் அவர்களைச் சந்தோஷப்படுத்த என்னைத் தெய்வ பத்தியுள்ள நல்ல பிள்ளையாக்கியருளும், சுவாமி. ஆமென்.

---

## சாப்பிடும் முன் சொல்லுஞ் சேபம்.

கர்த்தாவே, தேவரீர் எங்களையும் எங்களுக்குக் கிருபையாய்க் கட்டளையிட்ட இந்தப் போசனத்தையும் இயேசு இரட்சகரின் நிமித்தம் ஆசீர்வதித்தருளும், சுவாமி. ஆமென்.

## சாப்பிட்ட பின் சொல்லுஞ் செபம்.

பரமபிதாவே, தேவரீர் உம்முடைய ஈவுகளால் எங்களைத் திருப்தி யாக்கினதற்காக எங்கள்நாதர் இயேசுகிறிஸ்துவின் மூலமாய் உம்மை ஸ்தோத்திரிக்கிறோம், சுவாமி. ஆமேன்.

---

## பள்ளிக்கூடம் தொடங்குஞ் செபம்.

சகல மெஞ்ஞானத்துக்கும் ஊற்றாகிய பராபரனே, நாங்கள் தேவரீருடைய கிருபையில்லாமல் யாதொன்றைச் சிந்திக்கவும், தேவரீருடைய வெளிச்சமில்லாமல் யாதொன்றைக் கண்டறியவும் கூடாதவர்களும் புத்தியீனருமாய் இருக்கிறோம். ஆதலால் நாங்கள் எங்கள் படிப்பிலும் அறிவிலும் வளர்ந்து தேறும்படிக்கு, தேவரீர் எங்களையும் எங்கள் உபாத்திமாரையும் ஆசீர்வதித்து, உம்மையும் உமது நேசகுமாரனைம் அறிகிற மெய்யறிவையும் ஞானத்தையும் எங்களுக்குக் கட்டளையிட்டருளும். நாங்கள் வெளிச்சத்தின் பிள்ளைகளாக தெய்வபத்தியிலும் சன்மார்க்கத்திலும் நடந்து, உமது திருநாமத்தை மகிமைப்படுத்தும்படி உமது பரிசுத்த ஆவியினாலே எங்களை வழி நடத்தியருளும், சுவாமி. ஆமேன்.

---

## பள்ளிக்கூடம் முடிக்குஞ் செபம்.

தயவுள்ள பரமபிதாவே, இன்றைக்கு நாங்கள் இந்தப் பள்ளிக்கூடத்தில் உமது திருவசனத்தையும், பலவித பிரயோசனமான பாடங்களையும்படிக்க, தேவரீர் எங்களுக்குக் கிருபை செய்ததற்காக உம்முடைய நாமத்திற்கு ஸ்தோத்திரம். நாங்கள் இன்று உம்முடைய திருச்சித்தத்திற்கு விரோதமாகச் செய்த எல்லாப் பாவங்களையுந் தப்பிதங்களையும் இயேசுகிறிஸ்துவின் நிமித்தம் மன்னித்தருளும். நாங்கள் இங்கே கற்றுக்கொண்ட நல்ல காரியங்களை எங்கள் இருதயத்தில்பத்திரப்படுத்தவும், அவைகளுக்கேற்ற நற்கனிகளைக் கொடுக்கவும் எங்களுக்கு உமது பரிசுத்த ஆவியைக் கொண்டு ஒத்தாசை செய்தருளும், சுவாமி. ஆமேன்.

---

## தெய்வ வசனத்தை வாசிக்கும் முன் செய்யுஞ் செபம்.

நித்திய பராபரனே, எங்கள் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் பிதாவே, நாங்கள் உமது வசனமாகிய சத்திய வேதத்தை நன்றாயுங் கருத்தாயும் வாசித்துப் படித்து, அதில் கிறிஸ்துவையே தேடிக்கண்டறிந்து, அவரால் நித்திய சீவனைப் பெற்றுக்கொள்ளும்படிக்கு, தேவரீர் எங்களுக்குக் கிருபை செய்தருள வேண்டுமென்று உம்மைக்கெஞ்சி மன்றாடுகிறோம்; சுவாமி. ஆமேன்.

---

## தேவ ஆராதனைக்கு முன் செய்யுஞ் செபம்.

அன்புள்ள பரம பிதாவே, நான் தேவரீரைப் பணிந்து, உம்முடைய இரட்சிப்புள்ள வசனத்தைக் கேட்டு, உம்முடைய ஆசீர்வாதத்தைப்பெற்றுக்கொள்ள, உம்முடைய சந்நிதிக்கு முன்பாக வந்திருக்கிறேன். நான் உம்முடைய திருவசனத்தையும் ஞானப் பிரசங்கத்தையும் அசட்டைபண்ணாமல், அவைகளைப் பரிசுத்தமாக எண்ணிக்கொண்டு, சந்தோஷத்துடனே கேட்டுப்படிக்க என்னுடைய இருதயத்தை உமது பரிசுத்த ஆவியினாலே பிரகாசிப்பித்து நடத்தியருளும், சுவாமி. ஆமேன்.

---

## தேவ ஆராதனைக்குப் பின் செய்யுஞ் செபம்.

கிருபையுள்ள பராபரனே, தேவரீர் இப்போது எனக்கு இரக்கமாய்க் கட்டளையிட்ட உம்முடைய திருவசனத்திற்காகவும் ஆசீர்வாதத்திற்காகவும் உமக்கு ஸ்தோத்திரம். நான் கேட்ட உம்முடைய விலையேறப் பெற்ற வசனத்தை என் இருதயத்திலே பத்திரமாய்க் காத்து, பொறுமையோடே கனிகொடுக்கும்படி, என் அருமை இரட்சகராகிய இயேசுகிறிஸ்துவின் நிமித்தம் எனக்கு ஒத்தாசை செய்தருளும், சுவாமி. ஆமேன்.

# அட்டவணை.

# முதலாம் பங்கு.

பொதுவான திருச்சபையிலே தொன்றுதொட்டு வழங்கி வருகிற மூலக்குறிப்பிடமும், ஞான திரவியங்களைக் கற்பிக்கும் மூலவாக்கியங்களுமாகிய கிறிஸ்துமார்க்கத்தின் ஆதி நியாயங்கள்.

---

## கர்த்தர் அருளிச்செய்த பத்துக்கற்பனைகள்.

முதலாங் கற்பனையாவது, உன் தேவனாகிய கர்த்தர் நாமே. நமக்கு முன்பாக உனக்கு வேறே தேவனில்லாமல் போவதாக. உயர வானத்திலேயுங் கீழே பூமியிலேயும் பூமியின்கீழ்த் தண்ணீரிலேயும் உண்டான வஸ்துக்களுக்கு ஒத்திருக்கிற சுரூபத்தையாவது, விக்கிரகத்தையென்கிலும், நீ உனக்கு உண்டாக்கவேண்டாம்; நீ அவைகளை நமஸ்கரிக்கவும் வணங்கவும்வேண்டாம்.

இரண்டாங் கற்பனையாவது, உன் தேவனாகிய கர்த்தருடைய நாமத்தை வீணிலே வழங்காதிருப்பாயாக.

மூன்றாங் கற்பனையாவது, திருநாளை ஆசரிக்க நினைப்பாயாக.

நாலாங் கற்பனையாவது, உனக்கு நன்மை வருகிறதற்கும், நீ பூமியிலே நீடித்திருக்கிறதற்கும், உன் தகப்பனையும் உன் தாயையுஞ் சங்கித்திருப்பாயாக.

ஐந்தாங் கற்பனையாவது, கொலை செய்யாதிருப்பாயாக.

ஆறாங் கற்பனையாவது, விபசாரம்பண்ணாதிருப்பாயாக.